# ஏழு நாடகக்
# கதைகள்

என். ஸ்ரீராமதேசிகன்



வானதி பதிப்பகம்

# முன்னுரை

## டாக்டர் மு. வரதராசன், M.A., M.O.L., Ph. D.

நாடகங்களும் கதைகளும் பொதுவாக மக்களின் பலவகை உணர்ச்சிகளையும் போராட்டங்களையும் எடுத்துணர்த்துவன. அவற்றில் உயர்ந்த குறிக்கோள் உடையவராய்ப் பொது நன்மை கருதி வாழும் மாந்தரும் உண்டு; குறிக்கோள் இல்லாதவராய்த் தன்னலமே பேணிப் பிறர்க்கு இன்னல் இழைக்கும் மாந்தரும் உண்டு. இந்தப் பாகுபாடு நாடு, மதம், மொழி முதலிய வேறுபாடுகளைக் கடந்து உலகப் பொதுவாக உள்ளதாகும். ஆதலின் நாடகங்களும் கதைகளும் ஒரு மொழியில் இயற்றப்பட்டன ஆயினும், மற்ற மொழியில் அவற்றை மொழிபெயர்த்துப் போற்றிப் பயன்பெறக் காண்கின்றோம். வடமொழி நாடகங்களும் காவியங்களும் சிறந்த மொழி. பண்டைக்காலம் முதலே அவற்றைப் பல மொழியாரும் மொழிபெயர்த்து வந்துள்ளனர். இன்றும் இது நடைபெற்று வருகிறது என்பதற்கு இந்த நூலின் ஆசிரியர் திருவாளர் ஸ்ரீராமதேசிகன் அவர்களின் தொண்டு சான்றாகும். இந்த அறிஞர் தமிழிலும் நல்ல பயிற்சியும் ஆர்வமும் உடையவராக இருத்தலால், திருப்பாவை முதலான தமிழ் நூல்களை வடமொழியில் மொழி பெயர்த்துத் தொண்டாற்றி வருகிறார்.

''ஏழு நாடகக் கதைகள்'' என்னும் இந்நூல் வடமொழி அறியாத தமிழரின் நன்மைக்காக எழுதப்பட்டதாகும். காளிதாஸர், விசாகதத்தர், பாசன், பவபூதி முதலான புகழ்பெற்ற பெரும்புலவர்களின் கற்பனைத்திறனை இந்தக் கதைகளில் கண்டு மகிழலாம். உலகம் எவ்வளவு

வேகமாக மாறினும் மாருத வாழ்க்கைத் தத்துவங்களை இவர்களின் கற்பனைகள் உணர்த்துதலால், இவர்கள் படைத்த மாந்தர்கள் நம் உள்ளத்தைவிட்டு நீங்குவதில்லை. ஆதலின் ''ஏழு நாடகக் கதைகள்'' என்னும் இந்நூலை அனைவரும் போற்றிக் கற்றல் நன்று.

11-8-61 — மு. வரதராசன்

## அணிந்துரை

### கி. வா. ஜகந்நாதன் M.A., M.O.L.

கலைமகள் ஆசிரியர்

மிகப் பழங்காலம் முதல் இலக்கிய வளம்பெற்ற வடமொழியில் சுவைமிக்க நாடகங்கள் பல உள்ளன. படிப்பதற்கும் நடிப்பதற்கும் ஏற்ற வகையில் அமைந்தவை பல. காளிதாஸனுடைய நாடகங்களின் பெருமையை உலகமே அறியும். வடமொழி இலக்கியப் பெரும்பரப்பில் நாடகம் தனிப் பகுதியாகச் சிறப்பும் விரிவும் கொண்டு விளங்குகிறது. சில வடமொழி நாடகங்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன; பல இன்னும் தமிழ் மட்டும் அறிந்தவர்களால் அணுக முடியாத நிலையில் உள்ளன.

இந்தப் புத்தகம் வடமொழி நாடகங்கள் ஏழில் அமைந்துள்ள கதைகளைப் புலப்படுத்துகிறது. ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகங்களைக் கதை வடிவில் உருமாற்றி அளித்தார் சார்லஸ் லாம்ப் என்னும் புலவர். அதுபோலவே ஸ்ரீ ஸ்ரீராம தேசிகன் அவர்கள் வடமொழி நாடகங்கள் சிலவற்றைக் கதைகளாக்கி அளித்திருக்கிறார். அங்கே நாடகம் அமைந்த

மொழியாகிய ஆங்கிலத்திலேயே கதைகளும் உள்ளன. இங்கே மூல நாடகங்கள் வடமொழியில் இருக்க, அவற்றின் கதைகளைத் தமிழில் ஆசிரியர் தருகிறார். சுருக்கமாகவே கதைகளை அமைத்திருக்கிறார்.

இலக்கியத்தைச் சுவை கெடாமல் சுருக்குவது என்பது எளிய காரியம் அன்று. எதை விடுவது, எதைக் கொள்வது என்று யோசித்து யோசித்துச் செய்யவேண்டும். எதையும் விடத்தோன்றாது. ஆனாலும் எப்படியாவது சுருக்கத் தானே வேண்டும்? இந்தச் சுருக்கும் வேலையில் இவ்வாசிரியர் வெற்றி பெற்றிருக்கிறார் என்றே சொல்லவேண்டும். குறிப்பிட்ட நாடகம் ஒன்றை விரிவாக விமர்சனம் செய்யப் புகுபவர் முதலில் அதன் சுருக்கத்தை அமைக்கும் முறையில் இந்த நாடகக் கதைகள் உள்ளன. கதையின் கட்டுக்கோப்பு நன்றாகத் தெரியும்படி இந்தக் கதைகள் அமைந்துள்ளன.

தமிழ்நடை எளிதாகவும் எழுதிக் கைவந்ததாகவும் இருக்கிறது. மூலநூல்களிலே உலவ இயலாத தமிழர்களுக்கு இந்த நூல் நல்ல அறிமுகமாக உதவும் என்பது என் கருத்து.

8-8-61 கி. வா. ஜகந்நாதன்

## மதிப்புரை

### பி. ஸ்ரீ. ஆச்சார்யா

வடமொழி நாடகங்களைத் தமிழாக்கும் முயற்சிகளெல்லாம் பொதுவாக வரவேற்கத் தக்கன. இந்த முயற்சிகளுக்கு முன்னோடியாக நாடகக் கதைகளை மொழிபெயர்த்துத் தமிழ் வாசகர்களின் ஆவலைத் தூண்டுவதும் அவசியம் தான். எனவே எனது நண்பரும் சிறந்த வடமொழிப் புலவர்களில் ஒருவருமான ஸ்ரீராமதேசிகன் ''ஏழு

நாடகக் கதைகள்'' என்ற தலைப்பில் காளிதாஸரின் ''மாளவிகாக்கினிமித்ரம்'' முதலான நாடகங்களின் கதைகளைத் தமிழில் வெளியிட முன்வந்திருப்பதை மனமுவந்து பாராட்டுகிறேன்.

ஸ்ரீராமதேசிகனின் வடமொழிக் காதலையும், அதிலுள்ள அறிவுப் பொக்கிஷத்தைத் தமிழர்களுக்கெல்லாம் வாரி வழங்கவேண்டும் என்ற ஆர்வத்தையும் நான் நன்கு அறிவேன். இவருக்குத் தமிழிடம் பக்தி விசுவாசம் அதிகம். இந்தியப் பொதுமொழியான ஸமஸ்கிருதத்தையும் தமிழையும் கலைமகளின் இரு விழிகளாகக் கருதுபவர்.

''ஏழு நாடகக் கதைகள்'' இன்றைய தமிழர்களுக்கு ஒரு விருந்து. ருசித்தவர்கள் பசித்து வரும்போது, இவர் 'முகம் திரிந்து' நோக்காது, அவர்கள் உண்ண உண்ண மேன்மேலும் ஊட்டம் தரும் விருந்திட விரைவார்.

12-8-61 பி. ஸ்ரீ.

## சிறப்புரை

### வெ. சாமிநாத சர்மா

இந்த நூலில் ஏழு வடமொழி நாடகங்களின் கதைச் சுருக்கம் தரப்பட்டிருக்கிறது. அதன் நிஜ வடிவத்தைத் தெரிந்து கொள்வதற்கு இந்தக் கதைச் சுருக்கம் ஒரு

சோபானம் ஆகும். இதனை ஆசிரியர் லளிதமான முறையில் அமைத்துக் கொடுத்திருக்கிறார். சிறுசிறு வாக்கியங்களைக் கொண்ட இவருடைய தமிழ் நடையில் ஓட்டமும் தெளிவும் காணப்படுகின்றன.

ஸ்ரீ ஸ்ரீராமதேசிகன் இந்த ஏழு நாடகங்களின் கதைச் சுருக்கத்தைக் கொடுத்து இருப்பதோடு திருப்தி அடையவில்லை; நாடக ஆசிரியர்களையும் நமக்கு அறிமுகப் படுத்தி வைத்திருக்கிறார். இந்த அறிமுகம் இவர்களைப் பற்றியும் இவர்களுடைய இலக்கிய சிருஷ்டிகளைப் பற்றியும் மேலும் மேலும் அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலை உண்டு பண்ணுகிறது.

ஏற்கனவே திருப்பாவையை வடமொழியில் ஆக்கித் தந்திருக்கிற ஸ்ரீ ஸ்ரீராமதேசிகன் வடமொழியில் உள்ள இன்னும் பல நாடகங்களையும் காவியங்களையும் அப்படியே யாகவோ, அல்லது முதற்படியாகக் கதைச் சுருக்கமாகவோ தமிழாக்கித் தரவேண்டும் என்பது என் பெரு விருப்பம். இந்த அரும்பணியைச் செய்ய இவருக்கு எல்லா தகுதி களும் இருக்கின்றன. இவரோடு புலமை ஒட்டி இருக்கிறது; அந்தப் புலமையை அடக்கம் கவர்ந்து கொண்டிருக்கிறது; முதுமை இவரிடமிருந்து எட்டி நிற்கிறது; இவை அனைத் திற்கும் மேலாக இவருடைய குருநாதரின் நல்லாசி இவருக்கு எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கிறது.

இந்த மாதிரியான அனுகூலங்களைப் பெற்றிருக்கும் ஸ்ரீ ஸ்ரீராமதேசிகனின் இலக்கியப் பணி நாளுக்கு நாள் வளர்ந்து சிறக்க வேண்டும் என்று காகுத்தனைக் கைகூப்பி வேண்டுகின்றேன்.

15-3-61 வெ. சாமிநாதன்

## எனது நன்றி

பிரபல ஸம்ஸ்கிருத நாடகங்களை அனைவரும் அறிவர். மற்றவைகளையும் மேலெழுந்தவாரியாகவாவது தமிழன்பர்களுக்கு அறிமுகப்படுத்தும் நோக்கத்துடன் ஏழு ஸம்ஸ்கிருத நாடகங்களைச் சுருக்கிக் கதை வடிவத்தில் எழுதி இருக்கின்றேன். இவற்றுள், ''மாளவிகாக்கினிமித்ரம்'', ''முத்திராராட்சஸம்'', ''மாலதீ மாதவம்'', ''அவிமாரகம்'', ''தபதி ஸம்வரணம்'', ''காதம்பரி'', ''ரத்னேசப் பிரஸாதம்'' ஆகிய நாடகக் கதைகள் 'தினமணி' சஞ்சிகைப் பகுதியிலும், ''தபதீ ஸம்வரணம்'' என்ற நாடகக் கதை 'சுதேசமித்திரன்' வாரப் பதிப்பிலும் ஏற்கனவே தொடர்ந்து 1947-ம் ஆண்டில் வெளி வந்திருக்கின்றன. அவைகளே இப்பொழுது ''ஏழு நாடகக் கதைகள்'' என்ற புத்தக வடிவமாக உங்கள் முன் காட்சி அளிக்கின்றன. முதலில் சேர்க்கப்பட்டிருக்கும் ''நாடகாசிரியர்கள்'' என்ற பகுதி இவ்வேழு ஸம்ஸ்கிருதக் கவிகளின் வரலாற்றை அறிந்து கொள்ள உதவியாய் இருக்கும். இக்கதைகளைத் தொகுத்துத் தனிப் புத்தகமாக வெளியிட அனுமதி அளித்த ''தினமணி'', ''சுதேசமித்திரன்'' ஆகிய பத்திரிகாதிபர்களுக்கு எனது நன்றி உரித்தாகுக.

தமிழ் எழுத்தாளர்களுள் முன்னணியில் விளங்குபவர்களும் வாழ்நாளெல்லாம் தமிழுக்கே உழைத்துழைத்து வாழ்க்கையையே அதற்கர்ப்பணம் செய்தவர்களும் தமிழ் அமுதத்தை நாட்டிற்கு அள்ளிக் கொடுத்த வள்ளல்களுமான ஸ்ரீ மு. வரதராசனார், கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன், ஸ்ரீ பி. ஸ்ரீ. ஆசார்யா, ஸ்ரீ வெ. சாமிநாத சர்மா, ஆகியவர்கள் இதற்கு முன்னுரையும், அணிந்துரையும், மதிப்புரையும், சிறப்புரையும் வழங்கியதற்காக அவர்களுக்கு நன்றி செலுத்துவதில் நான் மிக்க மகிழ்ச்சி கொள்கிறேன்.

சிறந்த பல நூல்களை வெளியிட்டு மாபெரும் சாதனை புரிந்தவரும் எனது இந்நூலை அழகிய முறையில் வெளியிட்டவருமான வானதி திருநாவுக்கரசு அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

25, பர்கிட் ரோடு,
சென்னை.17

எஸ். என். ஸ்ரீராமதேசிகன்

# நாடகாசிரியர்களைப் பற்றி

## காளிதாசன்

உலகம் போற்றும் உத்தமக்கவி. நாடகக் கலைக்கொரு புத்துயிர் அளித்தவர். புதுமைக்கும் பழமைக்கும் இடையே புதியதோர் பாலத்தைப் போட்ட புண்ணிய புருஷர். வாழ்க்கை வழிகளைச் சித்தரித்துத் தந்த சிறந்த சிற்பி. வாழ வழி வகுத்த வரகவி. உபமானத்தைக் கையாளுவதில் ஒப்பற்றவர். உலகில் உள்ள எல்லா பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட்டும், உலகெங்கும் நடித்துக் காட்டப்பட்டதுமான சாகுந்தலம் என்னும் நாடகத்தை நாட்டிற்குத் தந்து புகழுடலுடன் இன்றைக்கும் நம்முடன் வாழ்ந்து வருபவர். ரகுவம்சம், குமாரசம்பவம், மேகதூதம் ஆகிய ஈடு இணையற்ற காவிய ரத்னங்களை இயற்றிய இவரது புகழை என்னென்று சொல்லுவது? நடை, அனுபவம் ஆகியவற்றால் மாளவிகாக்கினிமித்ரம் என்னும் நாடகம் இவர் இயற்றிய நூல் வரிசையில் இரண்டாவது ஸ்தானம் பெற்றுள்ளது. கி.மு. முதலாவது நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர். கவிச்சக்கரவர்த்தி காளிதாசன் இயற்றிய இந் நாடகம் எல்லா விதத்திலும் சிறந்து விளங்குகிறது என்று கூறவா வேண்டும்?

## விசாகதத்தன்

இவர் வடமொழியில் ''முத்திராராட்சஸம்'' என்ற நாடகத்தை வரைந்துள்ளார். சுமார் கி. பி. 11,12-ம் நூற்றாண்டு இவருடைய காலம். அக்னி புராணத்தில் உள்ள ஒரு கதையை ஆதாரமாகக் கொண்டு இது எழுதப்பட்டது. உரிமை இழந்து ஓட நேரிட்ட சந்திரகுப்த மௌரியனை சாக சத்தினால் சாணக்கியன் சக்கரவர்த்தி ஆக்கினான். பங்காளிக் காய்ச்சலுடன் கூடப் பிறரைக் கட்சி சேர்த்து மண் ஆசை நிறைவேறச் செய்வது சுலபம் அல்ல. படைபலத்தால் போரில் வென்றுவிடலாம். ஆனால் அவ் வெற்றியை

நிலேத்து உருவெடுக்கச் செய்வது கடினமான வேலே. ராஜ பக்தி, சீரிய நட்பு, ராஜதந்திரம் போன்ற நற்குணங்கள் அவசியமே. ஆனல் மித்திரபேதம், அக்கிரம நடத்தை, திருட்டுப்புரட்டு முதலியன துணைக் கருவிகளாக இல்லாமல் ராஜ்யத்தைப் பிடித்து, வேரூன்றி கட்டி ஆள முடியாது என்பதற்கு நமது தேச சரித்திரத்தில் ஓர் முக்கிய நிகழ்ச்சி யைக் குறிக்கும் இக் கதை சிறந்த எடுத்துக்காட்டாகும். காதலும் கருணேயும் இதில் மருந்துக்கும் கிடையாது. முக்கியமான பெண் பாத்திரங்களும் கிடையாது. வீரமும் சாரமும் கலந்த கதை இது. 23-நூற்ருண்டுகளுக்கு முன் இருந்து வந்த ராஜரிக இயல்புகளே அறிய இது பயன்படும்.

## குலசேகரவர்மா

இவர் கேரள நாட்டில் ஓர் அரச பரம்பரையில் பிறந் தவர். மஹோதயபுரம் என்னும் திருவஞ்சிக்குளம் இவருடைய வாசஸ்தலம். இது பெரியாற்றங்கரையில் உள்ளது. கி. பி. 11-வது நூற்ருண்டு இவருடைய காலம். குலசேகர ஆழ்வார் திருவஞ்சிக்குளத்தைச் சார்ந்த ராஜ பரம்பரையில் உதித்தவரெனப் 'பிரபந்தசாரம்' என்னும் நூலில் ஸ்ரீ வேதாந்ததேசிகன் கூறியுள்ளார். நடை, விஷ்ணுபக்தி, இப் பெரியாரின் பேச்சு ஆகியவைகளே ஆராயும் காலத்து, இக் கவி குலசேகர ஆழ்வாரின் பரம் பரையைச் சார்ந்தவராக இருக்கலாம் என்று ஊகிக்க முடி கிறது. ''ஆச்சரிய மஞ்சரி'' என்ற கத்ய காவியம் இவரது மற்ருெரு நூலாகும். மகாபாரதம், ஆதிபர்வம் 171-வது அத்தியாயத்தில் உள்ள கதையை ஆதாரமாகக் கொண்டு ''தபதீ ஸம்வரணம்'' என்ற நாடகம் உருவாக்கப்பட்டது.

## XI

## பாஸன்

இவர் புகழ்பெற்ற புராதனக் கவி. ''பிரசித்த மான பாஸன் முதலிய கவிகளின் காவியங்கள் இருக்க, எமது நாடகத்தில் ஏன் இத்துணை ஆதரவு'' என்று மாளவிகாக்னிமித்ரம் என்னும் நாடகத்தில் காளிதாசனே இவரைப் பெருமையோடு பேசி இருக்கிறார். இவர் 13 நாடகங்களை வரைந்துள்ளார். இவைகளுக்குப் ''பாஸ நாடக சக்கிரம்'' எனப் பெயர். சமஸ்கிருதக் கவிகளுள் ஏராளமான நாடகங்களை எழுதியவர் இவர் ஒருவரே. தேச பக்தி, கலைப்பற்று, நாட்டு விடுதலையில் ஆர்வம், இயற்கை வர்ணனை, கவிதை வேகம், நீதி வாக்கியம், உவமை, நடிப் பதற்கேற்ப கதை அமைத்தல், சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல், கம்பீரமான நடை, அதில் ஓர் விறுவிறுப்பு, தெளிவான கதை ஆகிய எல்லா அம்சங்களும் இவர் நாட கங்களில் அழகாய் அமைந்திருப்பதை அறிஞர்கள் அறிய லாம். கவிக்குலம் தழைக்க அவர்களுக்கோர் பாதையை வகுத்துத் தந்து பேருதவி செய்த பாஸ கவியின் திருப் பணியை யாராலும் என்றும் எங்குமே மறக்க முடியாது. கவியின் காலம் கி. மு. 5-ம் நூற்றாண்டு. கர்ண பரம்பரை யாக வந்த கதையை வைத்து உருவாக்கப்பட்டது ''அவிமாரகம்'' என்னும் நாடகம்.

## பாணன்

காதம்பரி என்னும் மஹாகாவியம் இவருடையது. வளம் பொருந்திய வடமொழிச் சொற்களை அடுக்கடுக்காய் அள்ளி வீசுவதில் அபார ஆற்றல் படைத்தவர் இவர். இதில் கதையைவிடக் கற்பனைதான் அதிகம் உள்ளது. பின்பு

வந்த பலர் இதில் உள்ள விஸ்தார கற்பனையை எடுத்து விட்டுக் கதையை மாத்திரம் சுருக்கி பல நூல்களை இயற்றி உள்ளார்கள். எனினும் அவற்றுள் காணப்படும் கதையின் போக்கு வாசகர்களின் மனத்தில் எளிதில் இடம் பெறுவதில்லை. ஆகவே, அக் கதையின் போக்கை நாடக பாணியில் மாற்றி அமைத்து, ''காதம்பரி கல்யாணம்'' என்ற நாடகத்தை நரசிம்ம கவி என்பவர் எழுதி உள்ளார். இவர் 16-ம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று கூறப்படுகிறது. இந் நாடகத்தைத் தழுவி இக் கதை எழுதப்படுகிறது.

## பவபூதி

இந்திய நாடகக்கலைக்கு உயர்வளித்த கவி வரிசையில் பவபூதி மிகவும் சிறந்தவர் ஆவார். இவர் காலம் கி. பி. 7-ம் நூற்றாண்டு என்பர். மஹாவீர சரிதம், உத்திர ராம சரிதம், மாலதீ மாதவம் ஆகிய சிறந்த நாடகங்களை இயற்றியவர் இவரே. இவற்றுள் மாலதீ மாதவம் கவியின் சொந்த கற்பனையில் உருவானது. சிருங்காரச் சுவையின் சிகரமாக விளங்குவது. கதைப் போக்கு, நாடகப்பாத்திரங்களின் அமைப்பு எல்லாம் கவியின் திறமை, உலகியல் அறிவு ஆகியவற்றுக்குச் சிறந்த உதாரணங்கள் ஆகும். நாடக பாத்திரங்களிடையே உள்ள தொடர்பு மிக அழகான பாணியில் அமைந்துள்ளது. பவபூதியின் பெருமையை உணர மாலதீ மாதவத்தின் கதை ஒன்றே போதுமானது.

# XIII

## குருராமகவி

திருவண்ணுமலையை அடுத்து வாழ்ந்து வந்தவர். அக் காலத்தில் மாபெரும் புகழ்பெற்று விளங்கிய ராஜ நாதடின்டிம கவியின் பெண் வயிற்றுப் பேரன் என்று தன்னை ''ரத்னேஸ்வர பிரஸாத'' நாடக முன்னுரையில் பெருமையோடு பேசிக் கொள்ளுகிறுர் கவி. கி. பி. 16, 17-ம் நூற்ருண்டில் இருந்தவர் இவர். அழகிய நடை, சிறந்த கற்பனை, விறுவிறுப்பான கதைப் போக்கு ஆகியவை இந் நாடகத்தின் சிறப்புகளாகும். ''சுபத்ரா தனஞ்சயம்,'' ''மதன கோபால விலாசம்'', ''விபாக ரத்ன மாலிகா'', ''ஹரிச்சந்திர சரிதம்'' ஆகியவைகளை இயற்றிய பெருமை இவரைச் சாரும்.

# இந்நூலாசிரியரைப் பற்றி

60 வயது நிரம்பிய ஸ்ரீ. எஸ். என். ஸ்ரீராமதேசிகன் திருப்பதி ஸமஸ்கிருத கலாசாலையில் பயின்று, சிரோமணி பட்டம் பெற்று, அங்குள்ள கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனத்தில் ஆராய்ச்சியாளர் ஆகவும், சென்னைப் பல்கலைக் கழகத்தில் இந்திய அரசாங்கத்தின் ஆதரவில் ஆராய்ச்சிப் புலவராகவும் பணியாற்றி இருக்கிறார். சென்னை கிண்டி இஞ்சினீயரிங் கல்லூரியில் பகுதி நேர விரிவுரையாளராகவும் பணியாற்றி, விஞ்ஞான முறையில் தர்க்கம் போன்ற சாஸ்திரங்களைக் கல்லூரி ஆசிரியர்களுக்கு போதித்து, அதைப்பற்றி ஆராய்ச்சிக் கட்டுரையையும் எழுதியிருக்கிறார். திருப்பதியிலுள்ள ஒரு மத்திய அரசாங்கத்தின் நிறுவனமாகிய கேந்திரிய ஸமஸ்கிருத வித்யா பீடத்தில் ஆராய்ச்சி அலுவலராகப்பதவி ஏற்று, தமிழ் ஸமஸ்கிருத மொழிகளுக்கிடையே ஒப்பாய்வு செய்து விரிவானதொரு நூலை எழுதியிருக்கிறார். ஆழ்ந்த ஸமஸ்கிருதப் புலமைக்காக இந்திய ஜனாதிபதியினுடைய பாராட்டைப் பெற்ற இவர் திருக்குறள், நாலடியார், கம்பராமாயணம், சிலப்பதிகாரம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சுப்ரமணிய பாரதியாரின் கவிதைகள், ஔவையார் நீதி நூல்கள் ஆகிய தமிழ் இலக்கியங்களை ஸமஸ்கிருதத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுப் பல அறிஞர்களின் பாராட்டுதலைப் பெற்றதோடு தமிழிலும் பல ஆராய்ச்சி நூல்களை ஆக்கித் தந்துள்ளார். 40 ஆண்டு காலமாகத் தமிழ் ஆங்கில தினசரி, வாரப்பத்திரிகைளில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் மதிப்புரைகள் எழுதிச் சிறந்த எழுத்தாளராக விளங்கும் இவரை, தமிழ் எழுத்தாளர் சங்கம் பதக்கத்தையும், பாரதியார் சங்கம் கேடயத்தையும், காரைக்குடி கம்பன் கழகம் பொன்னாடையையும்

அளித்து கௌரவித்திருக்கிறது. தஞ்சாவூர் ஸரஸ்வதி மகால் லைப்ரரி கௌரவ ஆசிரியராகவும், தென் இந்திய ஸமஸ்கிருத சங்கம், தமிழ் ஸமஸ்கிருதம் மற்றும் பிற மொழி ஆராய்ச்சி நிறுவனம் போன்ற இலக்கிய சங்கங்களுக்கு கௌரவ செயலாளராகவும் இருந்து பணியாற்றி வரும் இவருக்குத் தமிழ், தெலுங்கு, ஹிந்தி, ஆங்கிலம் போன்ற மொழிகளில் நல்ல புலமை உண்டு.

உள்ளே

# மாளவிகா

மகத தேசத்தின் தலைநகரான விதிசா என்னும் நகரை அக்னிமித்திரன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவனுக்குத் தாரிணி, இராவதி என்று இரு மனைவிகள் இருந்து வந்தனர். இரண்டாவது மனைவியாகிய இராவதி என்பவள் அரசன் கட்டளைப்படி ஹரதத்தன் என்ற குருவினிடம் நாட்டியக் கலையைப் பயின்று வந்தாள். வசுலக்ஷ்மி என்றொரு பெண் இவளுக்கு இருந்து வந்தாள்.

ஒரு சமயம் விதர்ப்பதேச மன்னனின் தாயாதியான மாதவசேனன் என்பவன் தனது தங்கை மாளவிகாவை அக்னிமித்திரனுக்கு மணம் செய்விக்க எண்ணி அவளுடன் மகத நாட்டிற்குப் புறப்பட்டான். இதை அறிந்த விதர்ப்ப நாட்டு மன்னன் ''அக்னி மித்திரன் நமக்கு ஜன்ம விரோதி. அவனுடன் மாதவசேனன் சம்பந்தம் செய்து கொண்டால் இருவரும் ஒன்று கூடி நம்மைப் பூண்டோடு ஒழித்து விடுவார்கள்'' என்று கருதி மாதவசேனனைச் சிறையில் வைத்து விடுகிறான். இச்செய்தியை அறிந்த விதர்ப்ப நாட்டு மந்திரி சுமதி என்பவன் மாளவிகாவிடம்

மனமிரங்கி, ''இவள் சத்ருவசம் அகப்பட்டால் பல துன்பங்களை அடைவாள். அதற்குள்ளாக இவளை மகத நாட்டிற்கு அனுப்பி விடவேண்டும்'' என்று எண்ணம் கொண்டு தனது தங்கை கௌசிகையைத் துணையாகக் கொண்டு மாளவிகாவை மகதநாட்டிற்கு அழைத்து வருகிறான். நடுவழியில் கள்ளக் கூட்டத்தால் தாக்கப்பட்டுச் சுமதி உயிர் துறந்தான். சகோதரனின் மரணத்தால் துயரமுற்று அவ்விடமே மூர்ச்சையடைந்து விடுகிறாள் கௌசிகை. கடைசியாக மகதநாட்டு எல்லைக் காப்பாளனாக வேலை புரிந்து வரும் தாரிணியின் சகோதரன் வீரசேனனிடம் சிக்குகிறாள் மாளவிகை. ''வழி தவறி வந்த இந்த அனாதைப் பெண்ணை தனது சகோதரி தாரிணியிடம் ஒப்படைத்தால் அவளுக்குப் பணி செய்து பிழைத்து வருவாள்'' என்ற நோக்கத்தோடு அவ்வாறே செய்கிறான் வீரசேனன். தாரிணிதேவி இவளை வெகு அன்போடு வளர்த்து வருகிறாள். மாளவிகையின் உடல்அழகு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தது. ''ரதிதேவியின் மாற்றுருவாய் வந்திருக்கும் இவளை அரசன் நேரில் கண்டால் எப்படியும் அடைய ஆவல் கொள்வான். அதனால் அவனுக்கு நம்மிடம் உள்ள அன்பு அரிதாகிவிடும். ஆகவே இவளை மன்னனுக்குத் தெரியாமல் மறைத்துக் காத்து வர வேண்டும்'' என்ற கருத்தோடு வகுளமாலிகை என்ற தோழியோடு மாளவிகையை இரகசியமாய் வைத்து, வளர்த்து வருகிறாள் தாரிணி. நாட்டியக்கலையில் தலை சிறந்து விளங்கும் கணதாசர் என்பவரை வரவழைத்து மாளவிகைக்கு இரகசியமாகவே நாட்டியக்கலைப் பயிற்சி நடந்து வருகிறது.

சகோதரனுடைய மரணத்தினால் மூர்ச்சையடைந்து இருக்கும் கௌசிகைக்குச் சற்று நினைவு வருகிறது. நாற்புறமும் திரும்பிப் பார்க்கிறாள். மாளவிகையை எங்கும் காணோம். மாளவிகை மகத நாட்டிற்கு வந்திருக்கும் செய்தி எங்கு தெரியப் போகிறது? துயரத்தினால் இல்லற

வாழ்க்கையை வெறுத்து துறவி வேடம் பூண்டு மகத நாட்டை நாடி வருகிறாள் கௌசிகை. கௌசிகையின் புலமையை அறிந்த அரசன் அவளை மிகவும் கௌரவித்து வருகிறான்.

ஒரு நாள் சித்திரக்காரனைக் கொண்டு மாளவிகையையும் தன்னையும் சேர்த்து ஒரு சித்திரத்தில் வரையச் செய்து அதைத் தன் முன்னே வைத்து அழகு பார்த்துக் கொண்டிருக்கிறாள் தாரிணி. திடீரென்று அரசன் அங்கு வருகிறான். புதியதாய்ச் சித்திரத்தில் வரையப்பட்டிருக்கும் அப்பெண்மணி யாரென்று அறிய அவாக் கொண்டு தாரிணியைப் பன்முறை வினவுகிறான் அரசன். பதிலொன்றும் இல்லை. அருகாமையில் இருந்த தனது அருமைக் குழந்தை வசுலக்ஷ்மி ''இவள்தான் மாளவிகை'' என்று அசட்டுத்தனமாய் தெரியாமலேயே கூறி விடுகிறது. அதைக் கண்டது முதல் மாளவிகையை எப்படியாவது நேரில் காண வேண்டும் என்ற கருத்துக் கொண்டவனாய் தன்னிருப்பிடம் வருகிறான் அரசன். அதற்குத் தகுந்த வழி யாதென தனது நண்பனை விதூஷகனிடம் பலவாறு ஆலோசனை நடத்துகிறான். விதூஷகனுக்கு ஒரு எண்ணம் உதித்தது. ''கணதாசருக்கும், ஹரதத்தருக்கும் இடையே நாட்டிய வித்தையை பயிற்சி செய்வதில் யார் சிறந்தவர் என்ற ஒரு பிரச்சினையைக் கிளப்பி விடலாம். அதனால் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் சண்டை செய்து, வாதம் செய்து முடிவை அறிய அரசனிடம் வருவர். அச்சமயம் அவர்களை பண்டித கௌசிகையிடம் அனுப்பினால் சிஷ்யர்களை நடனமாடச் செய்து அதிலிருந்து ஆசிரியர்களுக்குள்ள கற்பிக்கும் திறமையை எளிதில் அறிந்து கொள்ளலாம் என்று கௌசிகை உபாயம் கூறுவாள். நாட்டியப் போட்டியும் நடைபெறும். அப்பொழுது நீங்கள் மாளவிகையைப் பார்ப்பது அரிதல்லவே'' என்று கூறுகிறான் விதூஷகன். அரசனும் அவ்வாறே ஒப்புக் கொள்ளுகிறான். விதூஷகன் தன் முன்யோசனைப்படி இரு நாட்டிய ஆசிரியர்களிடமும்

சென்று 'உங்களில் யார் சிறந்தவர்' என்ற வாதத்தைக் கிளப்பி விடுகிருன்.

# 2

விதூஷகனின் சூழ்ச்சியை உணராமல் நாட்டிய ஆசிரியர்கள் தான்தான் கலையில் சிறந்தவன் என்று ஒருவருக்கொருவர் வாதம் செய்து கொண்டு முடிவையறிய அரசனிடம் வருகிருர்கள். ''இதில் நான் தீர்ப்புக் கூறினல் என்னை பட்சபாதி என்று உலகம் கூறும். பண்டித கௌசிகையை அணுகினல் உண்மையான தீர்ப்புக் கிடைக்கும்'' என்று தந்திரமாகச் சொல்லி அவர்களை அனுப்பி விடுகிருன் அரசன். இருவரும் கௌசிகையிடம் வருகிருர்கள். ''இக் கலையைச் சிலர் நன்கறிவர். மற்றும் பலர் அதைப் பிறருக்கு நன்கு கற்பிப்பர். அறிவதும், கற்பிப்பதும் ஆகிய இவ்விரண்டும் ஓர் ஆசிரியருக்கு அமைவது எளிதல்ல. எனவே உங்களில் யாருக்குக் கற்பிக்கும் திறமை இருக்கிறது என்பதை உங்கள் சிஷ்யைகளை வரவழைத்து நடனம் ஆடச்செய்வதின் மூலம் தெரிந்து கொள்ளலாம்'' என்று விதூஷகனின் முன்யோசனைப்படிக் கூறுகிருள் கௌசிகை. இவ்வுபாயத்தைத் தாரிணி விரும்பவில்லை. போட்டி நடக்கும் பொழுது மாளவிகையை அரசன் எப்படியும் கண்டு விடுவான் என்பது தாரிணியின் எண்ணம். எனினும் வேறு வழியின்றி அதற்கு இசைந்தாள். முதலில் மாளவிகை நாட்டியப் போட்டியில் கலந்து கொள்கிருள். அரசன் ஆசனத்தில் வீற்றிருக்கிருன். சுற்றிலும் விதூஷகன், தாரிணி, கௌசிகை முதலியவர்கள் முறையே அமர்ந்திருக்கிருர்கள். தகுந்த கோலத்துடன் நாட்டிய மேடை ஏறுகிருள் மாளவிகை. 'சலம்' என்ற நாட்டியத்தின் மீது போட்டி நடக்கிறது. மாளவிகையின் நாட்டியத்திறனைக் கண்டு அரசன் மெய் மறந்தான். அதனல் மாளவிகையின் ஆசிரியரான கணதாசரே வெற்றி பெற்றதாகத் தீர்ப்பளிக்கிருள் கௌசிகை. ஹரதத்தனுக்குப் பெருங்கோபம் உண்

டாகிறது. அவனிடம் தனது சூழ்ச்சியைக் கூறி ஏராளமான பொருள்களை அளித்துச் சமாதானம் செய்கிறான் அரசன். நாட்டியத்தைக் கண்டது முதல் அரசனின் மனம் மாளவிகையிடம் லயித்து விடுகிறது. விதூஷகன் சொற்படி வகுளமாலிகையும், மாளவிகைக்கு அரசனிடம் உள்ள அன்பை வளர்த்து வருகிறாள்.

# 3

அரசனுடைய மனம் மாளவிகையை நாடி ஓடுகிறது. ஆனால் அவளை அடைய வழி யாதென்று அவனுக்குப் புரியவில்லை. விரகவேதனையால் உடல் மெலிந்து துரும்பாய் இளைத்து விடுகிறது. விதூஷகனுடைய ஆறுதல் வார்த்தைகள் அனைத்தும் அரசனைச் சமாதானம் செய்ய முடியாமல் வீணாகி விட்டன. இராவதியின் தோழி ஒருத்தி அரசனிடம் வந்து ''நந்தவனத்தில் வசந்த காலத்தில் உல்லாசமாக உங்களுடன் விளையாட ஆவல் கொண்டு உங்களை உடனே தோட்டத்திற்கு அழைத்துக் கொண்டு வரும்படி தேவி கட்டளையிட்டிருக்கிறார்'' என்று கூறிச் செல்லுகிறாள். மாளவிகையையே நினைத்து உருகிவரும் அரசனுக்கு இச்செய்தி அவ்வளவு ஆனந்தத்தை அளிக்கவில்லை. எனினும் தேவியின் மனம் கோணாதிருக்க விதூஷகனுடன் நந்தவனம் செல்லுகிறான் அரசன். வசந்த கால சோபை காமமுற்றிருக்கும் அரசனின் மனத்தைப் புண்படுத்தியது. அக்காலத்தில் மலராத அசோக மரமும் பெண்களின் கால் பட்டால் மலர்வது வழக்கம் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். நந்தவனத்தில் ஓர் அசோக மரம் வெகு நாட்களாக மலராமலேயே இருந்து வந்தது. கால் சுளுக்கினால் நோயுற்றிருக்கும் தாரிணிதேவி நேரிடையாக அங்கு சென்று அசோக மரத்தை மலர்விக்கச் செய்ய முடியாதவளாய் தனக்காக மாளவிகையை அழைத்துத் தனது காரியத்தைச் செய்துவர வகுளமாலிகையுடன் நந்தவனம் அனுப்புகிறாள். இருவரும் அசோக மரத்தடியில் உட்காரு

கிறார்கள். வகுளமாலிகையின் உபதேசத்தால் அரசனிடம் கொண்டிருந்த மாளவிகையின் காதல் பன்மடங்கு பெருகியது. இருவரும் அரசனைப் பற்றி ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அங்கு சமீபத்தில் செடியின் அடியில் மறைந்திருந்த அரசனின் காதில் அப்பேச்சு விழுந்தது. அதனால் தாபமுற்றிருந்த அரசன் சற்று ஆறுதல் அடைந்தான். வகுளமாலிகை மாளவிகையின் கால்களை அலங்கரிக்க, மாளவிகை உடனே எழுந்து அசோக மரத்தைத் தனது கால்களால் உதைக்க முயலுகிறாள். அச்சமயம் மறைந்திருந்த அரசன் விதூஷகனுடன் திடீரென அவள் முன் தோன்றி ''மன்னன் கட்டளையின்றி யார் இவ்வாறு செய்வது?'' என்று வினவுகிறான். தாரிணியின் உத்தரவுப்படி நடந்து கொள்ளுவதாகக் கூறுகிறாள் வகுளமாலிகை. மாளவிகை மட்டும் சற்று பயந்து அரசனின் காலடிகளில் விழுகிறாள். இதுதான் தக்கதருணம் என்று எண்ணிய அரசன் அவளுடைய மெல்லிய இரு கரங்களையும் தனது தூய கரங்களால் பிடித்து, அவளை மேலே எழுப்புகிறான். வெகு நேரம் வரை காத்து இருந்தும் தனது செய்திப்படி அரசன் தன்னிடம் வராத காரணத்தால் இராவதி தற்செயலாக நந்தவனம் வருகிறாள். இத்தோற்றம் அவளுடைய கண்களில் விழுந்தது. சினம் கொண்டு அந்தப்புரம் திரும்புகிறாள் அவள். திடுக்கிட்டான் அரசன். இராவதியை சமாதானம் செய்ய அரசனுடைய முயற்சிகள் யாவும் படுதோல்வியடைந்தன. முடிவாக இராவதியின் கால்களில் விழுந்து மன்றாடியும் அவள் கோபத்துடனேயே திரும்பிச் செல்லுகிறாள்.

## 4

இடம்-அரண்மனை. ஆசனத்தில் அரசன் மாளவிகையை நினைத்தபடியே உட்கார்ந்திருக்கிறான். தாரிணியின் அந்தப்புரத்திலிருந்து விதூஷகன் இங்கு வருகிறான்.

இராவதி கோபத்தைப் பற்றி அரசன், நண்பனைச் செய்தி கேட்கிறான். ''நோய் வாய்ப்பட்டிருக்கும் தாரிணியைப் பார்க்கச் சென்றிருந்த இராவதி இச்செய்தியை அவளிடம் கூற, தாரிணி சீற்றம் கொண்டு மாளவிகையை வகுள மாலிகையுடன் சிறை வைத்து, தான் அணிந்து இருக்கும் பாம்பு முத்திரை மோதிரத்தை கொண்டு வருபவர்களிடமே மாளவிகையைச் சிறையிலிருந்து விடுவித்து, ஒப்படைக்க வேண்டும்'' என்று காவல்காரியான மாதவிக்கு உத்தரவு பிறப்பித் திருப்பதாகவும் செய்தி கூறுகிறான் விதூஷகன்.

இச்செய்தி அரசனுக்குப் பெரும் துயரத்தை அளித்தது. மாளவிகையை விடுவிப்பதற்கு வழி யாதென நண்பனுடன் திட்டமிடுகிறான் அரசன். ''நீங்கள் தாரிணி தேவியைப் பார்ப்பதற்காக அந்தப்புரம் செல்லுங்கள். வெறுங்கையுடன் மகாராணியைப் பார்ப்பது உசிதம் இல்லை என்று சொல்லி மலர்களைப் பறித்து வருவது போல் நந்த வனம் செல்லுகிறேன். அங்கு தாழம் முட்களால் உடம் பைக் கீறிக் கொண்டு பாம்பு கடித்து பற்கள் பதிந்து இருப் பதாக பாவனை செய்து உங்களிடம் உடனே ஓடி வந்து மலர் பறிக்கச் சென்ற எனக்கு இக்கதி ஏற்பட்டது என்று சொல்லி, உங்கள் முன் கூச்சலிடுவேன். நீங்கள் உடனே துருவசித்தி என்ற விஷ வைத்தியனை இங்கு வரவழைத்து எனக்கு சிகிச்சை செய்யச் சொல்லுங்கள். வைத்தியனும் என் சங்கேதப்படி பாம்பு முத்திரை மோதிரம் இருந்தால் இதைச் செய்து முடிப்பதாகக் கூறுவான். சூழ்ச்சியை உணராத தாரிணி, தான் அணிந்திருக்கும் பாம்பு முத்திரை மோதிரத்தை கழற்றிக் கொடுப்பாள். அதைக் கொண்டு மாதவியை ஏமாற்றி விஷயத்தை முடித்து விட லாம்'' என்று உபாயம் கூறுகிறான் விதூஷகன்.

தாரிணியின் படுக்கை அறை. அங்கு அலங் கோலமாகப் படுத்து இருக்கிறாள் தாரிணி. கௌசிகை அவள் அருகாமையில் அமர்ந்து இருக்கிறாள். அரசன் திடீ ரென அவளைக்காண வருகிறான். முந்திய திட்டத்தின்படி

விதூஷகன் முட்களால் கீறிய உடம்புடன் ஓடிவந்து பாம்பு கடித்து விட்டதாகக் கூறி, எல்லோரையும் நம்பும்படி ஓலமிடுகிறான். தாரிணிதேவி இதை உண்மை என்று நம்பி சிகிச்சை பெற துருவசித்தியிடம் இவனை அனுப்புகிறாள். முன் திட்டப்படி பாம்பு முத்திரை மோதிரம் தேவையென செய்தி கிட்டவே, தாரிணியின் கையில் அணிந்திருந்த பாம்பு முத்திரை மோதிரம், விதூஷகனிடம் சிக்கிவிடுகிறது. உடனே விதூஷகன் சிறைச் சாலைக்குச் சென்று ''அரசனுக்கு காலபலம் சரியில்லாததால் ஜோதிஷர்களின் ஆலோசனைப்படி சிறையில் உள்ள கைதிகள் அனைவரையும் விடுவிக்குமாறு அரசனின் கட்டளை. அதை நிறைவேற்றிவைக்க, தாரிணி தேவியால் அனுப்பப்பட்டு, அடையாளமாக அவளிடமிருந்து பாம்பு முத்திரை மோதிரத்தைப் பெற்று வந்திருக்கிறேன்'' என்று பசப்பு வார்த்தைகளால் மோதிரத்தைக்காட்டி, மாதவியை நம்பவைத்து, மாளவிகையை சிறையிலிருந்து விடுவித்து அவளை ஓர் ரகசிய அறையில் வைத்து, அரசனிடம் வந்து, நடந்த செய்திகளைக் கூறுகிறான்.

நண்பனுடன் அரசன் ரகசிய அறைக்கு வருகிறான். உடனே வகுளாவளிகை தோழியைப் பிரிந்து ஜாடையாக சற்று தூரத்தே சென்றுவிடுகிறாள். விதூஷகன், யாரும் உள்ளே செல்லாதபடி அங்கே காவல் புரிகிறான். ரகசிய அறைக்குள் காதலர்களின் காதல் விளையாட்டு கண்யமாக நடந்து வருகிறது. காவல் காத்துவரும் விதூஷகன் தூக்க மயக்கத்தில் மாளவிகா என்று உளறிக் கொண்டிருக்கிறான். நிபுணிகா என்ற தோழியுடன் அங்கு வந்த இராவதிக்கு இச்சப்தம் ஏதோ சந்தேகத்தை அளித்தது. விளையாட்டாக ஒரு குச்சியை எடுத்து விதூஷகனின் தலைமேல் எறிகிறாள் இராவதியின் தோழி. பாம்பு, பாம்பு என்று விதூஷகன் தூக்க மயக்கத்தில் உளறுவதைக் கேட்ட அரசன், மாளவிகையுடன் இரகசிய அறையிலிருந்து வெளியில் வருகிறான். இருவரும் ஏகாந்த ஸ்தலத்திலிருந்து ஜோடியாய் வெளிவருவது இராவதியின் கோபத்தை

இருமடங்காக்கி விடுகிறது. இச்சம்பவம் தாரிணிதேவியிடம் எட்டி விட்டது. மாதவியை விதூஷகன் ஏமாற்றிய செய்தி நகரமெங்கும் பரவியது.

## 5

தாரிணியின் அந்தப்புரம் :- மாளவிகை, கௌசிகை ஆகியவர்களுடன் தேவி ஆசனத்தில் அமர்ந்திருக்கிறாள். ''வெகு காலமாக மலராதிருந்த அசோகமரம், மாளவிகையின் கால் பட்டதிலிருந்து மலர்களைச் சொரிகின்றது'' என்ற செய்தியை ஒரு வேலைக்காரன் தாரிணியிடம் வந்து கூறுகிறான். இது அவளுக்கு மிகுந்த களிப்பையளித்தது. மாளவிகைக்கு ஏதாவது தகுந்ததோர் வெகுமதியளிக்க வேண்டுமென்று தனக்குள் முடிவு செய்து கொண்டாள். அசோக மரத்தின் அழகைக்கண்டு களிக்க அரசனை அங்கு வரும்படி செய்தியனுப்பித் தானும் மாளவிகை, கௌசிகை ஆகியவர்களுடன் வருகிறாள். தனது சூழ்ச்சி வெளியானபடியால், தாரிணிதேவி என்ன செய்வாளோ என்று பயந்திருந்த அரசன், மனதைத் தேற்றிக் கொண்டு விதூஷகனுடன் மரத்தடிக்கு வருகிறான்.

மாதவசேனனைச் சிறைப்படுத்தியதின் காரணமாக மகததேசத்திற்கும் விதர்ப்ப தேசத்திற்கும் போர் மூண்டு, விதர்ப்ப தேசத்தரசன் போரில் முறியடிக்கப்பட்டான். மாதவசேனன் பிறகு விதர்ப்பதேசத்தரசனானான்.

இச்செய்தியை தனது தோழனான அக்னிமித்திரனுக்குத் தெரிவிக்க இரு தூதர்களை அவனிடம் அனுப்பு

கிறான் மாதவசேனன். அவர்கள் மாதவசேனனுடைய தங்கை மாளவிகை அங்கிருப்பதைக் கண்டு வியந்து இவள் இங்கு வருவதற்குக் காரணம் யாதென ஆராய் கின்றனர். மாளவிகையும், தனது சகோதரர்களின் தூதர்கள் இங்கு வந்திருப்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந் தாள். இவர்கள் ஒருவரையொருவர் கண்டு தெரிந்தவர் களைப்போல் நடந்து கொள்வதைக் கண்ட அரசன் முதலி யோருக்கு இது பெரும் புதிராகவேயிருந்தது. 'மாள விகையை உங்களுக்கு எப்படித் தெரியும்?' என்று அரசன் அவர்களைக் கேட்கிறான். இவள் எங்களுடைய தலைவரான மாதவசேனனின் தங்கையென்று பதில் கிடைக்கிறது. ஏதோ ஒரு அனாதைப் பெண்ணென்று இவளை எண்ணிவந்த அரசன் முதலானவர்க்கு இவள் அரச குடும்பத்தைச் சேர்ந் தவள் என்று இப்பொழுதுதான் புலனாகிறது. இவ்வளவை யும் தெரிந்திருந்தும், இதுவரை சொல்லாமலேயே யிருந்த கௌசிகை தானும் மாளவிகையும் விதர்ப்ப தேசத்தி லிருந்து புறப்பட்டு இந்நாட்டை யடைந்த வரலாற்றை யெல்லாம் கூறி முடிக்கிறாள். ''மாளவிகையினுடைய தந்தை இவளுடைய சிறு வயதில் ஒரு ஜோதிஷர் மூலம் ஜாதகத்தைப் பார்த்து, இவள் ஒரு வருடகாலம் ஓர் இடத் தில் அடிமையாக இருந்து, பிறகு நற்பதவியை அடைவாள் என்று சொல்லியிருப்பதின் காரணமாக தேவரகசியம் வெளிவரலாகாது என்ற காரணத்தால் மாளவிகையின் வரலாற்றைத் தான் தெரிந்திருந்தும் வெளியிடவில்லை'' என்று தாரிணியிடம் கூறி மன்னிக்க வேண்டுகிறாள் கௌசிகை. அசோக மரத்தை மலரவைத்த மாளவிகையை அரசனுக்கு மணம் செய்வித்து, அதன் மூலம் மாளவிகையின் கடனைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று தாரிணி, இராவதி இருவரும் தமக்குள் தீர்மானித்துக் கொண்டனர். மணமும் இனிது நிறைவேறியது. இம்மூன்று தேவிமார் களுடைய மனமும் கோணாதவாறு நடந்து வந்தான் அரசன். தேவியரும் ஒன்று பட்டு வாழ்ந்து வந்தனர்.

# முத்திராராட்சஸம்

பாடலிபுரத்தின் தலைநகரான குசுமபுரத்தில் நந்த வம்சத்தைச் சேர்ந்த சர்வார்த்தசித்தி என்பவன் அரசாண்டு வந்தான். வக்கிரநாஸன், ராட்சஸன் முதலிய மந்திரிமார்கள் இவனுக்கு இருந்து வந்தனர். ராட்சஸன் என்பவன் சிறந்த அறிவாளி. ராஜதந்திரங்களை நன்கு உணர்ந்தவன். அரசனின் தனிப்பெரும் மதிப்புக்குப் பாத்திரனாய் அரசுப்பொறுப்பு முழுவதையும் தானே ஏற்று நடத்தி வந்தான். இவன் பிறவியில் பிராம்மணனாகிலும் கொடூரச் செயல்களைச் செய்து, அதனால் ராட்சஸன் என்ற காரணப் பெயரைப் பெற்று வந்தான். அரசனுக்கு சுனந்தா, முரா என்ற இருமனைவியர் உண்டு. சுனந்தா என்பவள் நவநந்தர்கள் என்று புகழ்பெற்ற ஒன்பது பிள்ளைகளையும், முரா என்பவள் மௌரியன் என்பானையும் பெற்று இருந்தனர். சுனந்தாவின் புதல்வர்களான நவநந்தர்களுக்குப் பட்டம் சூட்டி மௌரியனைப் படைத்தலைவனாக்கி,

தான் அரசியலில் இருந்து விலகிக் கொண்டான் அரசன். மௌரியனுக்குப் பராக்கிரமம், கல்வி எல்லாம் ஒருங்கே அமையப் பெற்ற சந்திரகுப்தன் முதலான நூறு புதல்வர்கள் ஜனித்தனர். இவர்களுடைய வலிமையைக் கண்டு அசூயை கொண்ட நந்தர்களும், ராட்சஸனும் தந்திரமாக அவர்களைச் சிறைப்படுத்தி அன்னாகாரம் இன்றி வெகு நாட்கள் வரை கைதிகளாகவே வைத்திருந்தனர். தொன்னூற்றென்பது பிள்ளைகளோடு தகப்பனான மௌரியன் சிறையிலேயே வாடி மடிந்தான். சந்திர குப்தன் மாத்திரம் தப்பி உயிரோடு வாழ்கின்றான். அவனை ஒழித்துக் கட்ட ராட்சஸன் செய்த முயற்சி ஒன்றும் ஈடேறவில்லை. கடைசியில் சிறையிலிருந்து சந்திரகுப்தனை விடுவித்து அவனை அன்ன சத்திரத்திற்கு அதிகாரியாக நியமித்தான் ராட்சஸன்.

## சாணக்கியன் நட்பு

ஒரு நாள் அன்னசத்திரத்தை நோக்கி ஒரு அந்தணன் வருகிறான். வழியில் புல் அவன் காலில் தடுக்கிறது. அதனால் கடுஞ்சினம் கொண்டு அவ்வந்தணன் அதை வேரோடு பிடுங்கி நெருப்பில் பொசுக்கி தூர எறிந்து விடுகிறான். இச்சம்பவத்தைச் சத்திரத்தின் வாயிலில் நின்று கொண்டிருந்த சந்திரகுப்தன் கவனிக்கிறான். இப் பிராமணன் யார் தெரியுமா? உலகத்திலேயே தந்திரத்தில் பெயர் போன சாணக்கியன் ஆவான். இவன் தந்திரத்தைக் கையாளுவதில் மேதாவிலாசம் பெற்றவன். நீதியில் நிபுணன். சூழ்ச்சி செய்தே துளி ரத்தம் சிந்தாமல் பகைவர்களை வசப்படுத்தக் கூடிய ஆற்றல் வாய்ந்தவன். நீதி சாஸ்திரத்தை இயற்றியவன். இவனை நம் நண்பனாக அமைத்துக் கொண்டால் நந்தர்களைச் சுலபமாக அழித்து விட முடியும் என்று எண்ணம் கொண்டான் சந்திரகுப்தன்.

சாணக்கியனும், சந்திரகுப்தனை அணுகுகிறான். நந்தர்களை ஒழித்துக் கட்டுவதில் தனக்கு உதவி புரியுமாறு சந்திரகுப்தன் இவனைக் கேட்க, தன்னால் இயன்ற உதவியைச் செய்து தருவதாக வாக்களிக்கிறான் சாணக்கியன். பிறகு அன்னம் அருந்த சத்திரத்தினுள்ளே இவனை அழைத்துச் செல்லுகிறான் சந்திரகுப்தன். அங்கு நந்தர்கள் அமருவதற்காகப் போடப்பட்டுள்ள ஆசனத்தில் அமர்கிறான் சாணக்கியன். அருகிலுள்ள ராஜ தூதர்கள் கோபத்தால் சாணக்கியனை இழுத்து வெளியே தள்ளி விடுகிறார்கள். பெருஞ் சினங் கொண்டான் சாணக்கியன். தன் தலையை விரித்துக் கொண்டு, ''நந்தர்களைப் பூண்டோடு அழிக்காத வரையில் என் சிகையை நான் முடிவதில்லை'' என்று அவர்கள் முன்னிலையில் சபதம் செய்து விட்டு அதற்குத் துணையாகச் சந்திரகுப்தனையும் அழைத்துக் கொண்டு ராஜ்யத்தை விட்டு வெளியேறுகிறான் சாணக்கியன். இருவரும் சிறிது நாட்களுக்குள் பர்வதேசுவரன் என்ற எல்லைப்புற மன்னவனை அணுகி, கிடைக்கும் ராஜ்யத்தில் அவனுக்குப் பாதி கொடுப்பதாக வாக்குறுதி அளித்து அவனுடைய உதவியால் சைனியங்களைக் கொண்டு அந்நகரை முற்றுகையிட்டு நவநந்தர்களைக் கொன்று விடுகின்றனர். சாணக்கியனுடைய தந்திரம் சுலபமாய் நிறைவேறுகிறது. சர்வார்த்தசித்தி, ராட்சஸன் இவ்விருவர் மாத்திரம் உயிர் தப்பினர்.

## ராஜ தந்திரப்போர்

ராஜ விசுவாசமுள்ள ராட்சஸன் எப்படியாவது சந்திரகுப்தனையும் சாணக்கியனையும் கொன்று சர்வார்த்த சித்திக்குப் பட்டம் கட்டிவைக்க வேண்டுமென்று எண்ணியவனாய் அவனை உயிருடன் சுரங்கம் வழியாக வெளியேற்றித் தனது மனைவி, குழந்தை முதலியோர்களை குசுமபுரத்திலேயே தனது ஆருயிர்த் தோழனான சந்தனதாசன் என்னும் வைசிய வியாபாரியின் வீட்டில் மறைத்து வைத்து சந்திர

குப்தனை ஒழித்துக் கட்ட எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டு வெளியேறுகின்றான். வெளியில் இருந்தவாறே சந்திரகுப்தனையும் சாணக்கியனையும் கொல்ல தூதர்கள் மூலம் பல ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. ராட்சஸனின் ஆணைப்படி நகரத்திலுள்ள பொதுமக்கள் ராட்சஸனிடம் மிகுந்த அன்பு காட்டி வந்தனர். எதிரிகளின் சதிவேலையை எல்லாம் முன்னதாகவே ஒற்றர்கள் மூலம் சூட்சுமமாக அறிந்து வந்தான் சாணக்கியன். ''ராட்சஸனும் மேதாவி. ஜனங்களும் அவனிடம்அன்பு கொண்டுள்ளார்கள். எப்படியும் ஒற்றர்கள் மூலம் உண்மையை உணர்ந்து நமது ராஜ்யத்தைக் கவிழ்த்து விட அவன் ஏதாகிலும் முயற்சி எடுத்துக் கொண்டே இருப்பான். ராட்சஸனை வசப்படுத்திக் கொள்ளாதவரை, கிடைத்த ராஜ்யமும் நமக்கு நிலைக்காது'' என்பதை உணர்ந்து சாணக்கியன், சந்திர குப்தனை சிம்மாசனத்தில் அமர்த்தாமல் குசுமபுரத்திலேயே ஓரிடத்தில் தலைமறைவாக இருந்து கொண்டு ராட்சஸனை வசப்படுத்துவதிலேயே முழுக் கவனத்தையும் செலுத்தி வருகிறான். மாறுவேடங் கொண்ட பல தூதுவர்களை அனுப்புவதிலும், மற்றும் அநேக ஏமாற்று வித்தைகளை ஓயாமல் செய்வதிலுமே சாணக்கியனின் மூளை வேலை செய்து வந்தது.

## மூன்று ஒற்றர்கள்

சித்தார்த்தகன், பாகுராயணன், ஜீவசித்தி என்ற பௌத்த சந்நியாசி, ஆகிய இம்மூவர்களும் மாறுவேடம் பூண்டு சாணக்கியனிடம் விடை பெற்று பகைவர்களுடைய இரகசியங்களை அறிந்து அவ்வப்பொழுது சாணக்கியனுக்குத் தெரிவிப்பதற்காகக் குசுமபுரம் செல்கிறார்கள். இவர்களுள் பாகுராயணன் ராட்சஸனைத் தன் முக்கிய நண்பனுக்கிக் கொண்டான். சித்தார்த்தகனும், ராட்ச

ஸனின் உயிர்த் தோழனுகிய சகடதாசன் என்பவனை நண்பனுக்கிக் கொண்டான். ஜீவசித்தி என்பவன் அடிக்கடி ராட்சஸனிடம் சென்று அவனோடு நட்பை வளர்த்துக் கொண்டு பெரிய சிநேகிதன் போல் கபடநாடகம் ஆடி வருகிறுன்.

**விஷ கன்னிகை**

ராட்சஸன் மகாபுத்திசாலியாக இருந்தும் பாகுராயணன் முதலிய இம்மூன்று ஒற்றர்களின் கபட நாடகத்தை உணராமல் உண்மை நண்பர்கள் எனக்கருதி வந்தான். சந்திரகுப்தனைத் தீர்த்துக் கட்டுவதில் அவர்களுடைய உதவியை நாடினுன் ராட்சஸன். ஜீவசித்தி ஓர் சிறந்த மந்திரவாதி. 'பகைவர்களைக் கொல்ல ஏதாகிலும் மந்திரப் பிரயோகம் செய்யத் தெரியுமா?' என்று ராட்சஸன் கேட்க ''நான் விஷமயமான ஒரு பெண்ணை உண்டாக்குவேன். அவளைத் தீண்டுபவன் அப்படியே உயிர் துறப்பான்'' என்று ஜீவசித்தி கூற, அதன் படி விஷ கன்னிகையைச் செய்து சந்திரகுப்தனிடம் அனுப்புமாறு ராட்சஸன் கட்டளையிடுகிறுன். கட்டளைப்படியே காரியமும் நடக்கிறது. இச்செய்தியை முன்னதாகவே உணர்ந்த சாணக்கியன் சந்திரகுப்தனுக்கு உணர்த்தி விட்டான். ''இந்த விஷகன்னிகையைப் பர்வதேசுவரனிடம் திருப்பி அவனைத் தொலைத்துக் கட்டினுல் பழைய ஒப்பந்தப்படி அவனுக்குச் சேரவேண்டிய பாதிராஜ்யம் நமக்கே கிடைத்துவிடும்'' என்று எண்ணியவனுய் அவ்வாறே செய்கிறுன் சாணக்கியன். விஷகன்னிகையைத் தீண்டி மடிகிறுன் பர்வதேசுவரன். அவனுடைய மகனை மலையகேது என்பவன் உயிருடன் இருந்தால் தந்தைக்குப் பதிலாக பாதிராஜ்யம் கேட்பான். எனவே அவனையும் பகைத்துக் கொண்டு அவனை ராட்சஸனிடம் போய்ச் சேருமாறு தந்திரம் செய்கிறுன் சாணக்கியன்.

"ராட்சஸன் விஷகன்னிகையைத் தயார் செய்து அனுப்பிய செய்தியை மறைத்து தானே அக்கன்னிகையை சிருஷ்டி செய்து பர்வதேசுவரனிடம் அனுப்பி அவனைக் கொன்று விட்டதாக நகரெங்கும் பொய்ப் பிரசாரம் செய்தால் தகப்பனைக் கொன்ற கோபத்தால் நம்மை விட்டு மலையகேது ராட்சஸனிடம் போய்ச் சேருவான்" என்ற திட்டத்துடன் சாணக்கியன் நகரமெங்கும் பொய்ப்புரளியைப் பரப்பி விடுகிறான். அவன் நினைத்தபடியே மலையகேதுவுக்கு ராட்சஸனோடு நட்பு ஏற்பட்டு வளர்ந்து வருகிறது. சந்திரகுப்தனை ஒழிப்பதில் ஒருவருக்கொருவர் சகாயமாய் இருந்து வந்தனர். இதைக்கண்ட பாகுராயணன் என்ற சாணக்கியனின் ஒற்றன் "ராட்சஸனும் மலையகேதுவும் ஒன்று சேர்ந்தால் சந்திரகுப்தனைச் சுலபமாகத் தீர்த்துக் கட்டி விடுவார்கள். ஆகையால் நான் மலையகேதுவுக்குப் பிரதான மந்திரியாக இருப்பது போல் நடித்து இவ்விருவருக்கும் பகையை உண்டாக்க வேண்டும்" என்று சதியாலோசனை செய்து அவ்வாறே மலையகேதுவின் அன்புக்குப் பாத்திரனாகிக் கபட வேடம் போட்டுத் தனது காரியத்தை இரகசியமாக நடத்தி வருகிறான். இம்மூன்று ஒற்றர்கள் மூலம் அவ்வப்பொழுது கிடைக்கும் இரகசியச் செய்திகள், சந்திரகுப்தனைக் காப்பாற்றவும், ராட்சஸனைத் தன் வசப்படுத்திக் கொள்ளவும், சாணக்கியனுக்குப் பெரிதும் பயன்பட்டன.

## முத்திரை மோதிரம்

நகர ஜனங்களின் போக்கையும், சந்திரகுப்தனை அழிக்க ராட்சஸன் செய்யும் ஏற்பாடுகளையும் அறிந்துவர, சரன் என்னும் தூதனைப் பிச்சைக்கார வேடத்துடன் குசுமபுரத்திற்கு அனுப்புகிறான் சாணக்கியன். நகரில் வீடு வீடாகச் சென்று பிச்சை எடுப்பதின் மூலம் மர்மங்களை எல்லாம் தெளிவாக உணர்ந்து கொண்டு ராட்சஸனின்

அந்தரங்க நண்பனுன சந்தனதாசன் வீட்டு வாசலை அடைந்து பிச்சை கேட்கிருன் சரன். ராட்சஸனின் அதிகார முத்திரை வைத்த மோதிரத்தைக் கையிலணிந்து கொண்டு அங்கு நின்றுகொண்டிருந்த ரட்சஸனின் குழந்தை இவனைக் கண்டு பயந்து உள்ளே ஓட, வாசல்படி தடுக்கிக் கீழே வீழ்ந்தது. கையிலிருந்த மோதிரம் கழன்று சிதறித் தெருவில் விழுகின்றது. அதை எடுத்தான் சரன். ''ராட்சஸன்'' என்ற எழுத்துக்களால் மோதிரம் பொறிக் கப்பட்டிருந்தது. களிப்போடு எடுத்துக் கொண்டு சாணக்கியனிடம் வருகிருன் சரன். குசுமபுரத்தில் நடக்கும் செய்திகளையும், ஜனங்களுக்குச் சந்திரகுப்தனிடம் உள்ள விசுவாசத்தையும், ராட்சஸன் நம்மை வீழ்த்தச் செய்யும் முயற்சியையும், தனக்கு அங்கு ஜனங்களிடையே எவ்வளவு ஆதரவு இருக்கிறது என்பதைப் பற்றியும் முறையே சாணக் கியன் சரனைப் பார்த்து வினவுகிருன். ''பிரபோ! நாம் ஜனங்களுக்குச் செய்யும் நன்மைகளால் எல்லோரும் சந்திரகுப்தனிடம் விசுவாசம் உள்ளவர்களாகவே இருக் கிருர்கள். ஆனுல் சித்தார்த்தகன், சகடதாசன், சந்தன தாசன் ஆகிய மூவரும் ராட்சஸனுடைய பிரிய நண்பர்கள். இவர்கள் சந்திரகுப்தனை ஒழிக்க நமக்கு எதிராக ராட்ச ஸனேடு கூடி சதிவேலைகளைச் செய்து வருகின்றனர்'' என்று சொல்லிச் சந்தனதாஸனுடைய வீட்டின் வாசலில் கிடைத்த முத்திரைமோதிரத்தைச் சாணக்கியனிடம் கொடுத்து நடந்தவற்றைக் கூறி முடித்தான் சரன் என்னும் தூதுவன். அம்மோதிரம் கிடைத்ததால் சாணக்கியனுக் குண்டான மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ராட்சஸனே தன் கையில் சிக்கியது போல் எண்ணி மகிழ்ந்தான். இம் முத்திரைமோதிரத்தை வைத்துக் கொண்டு சில தந்திரங்களைச் செய்து மலையகேதுவையும் ராட்சஸனையும் தனியே பிரித்து ராட்சஸனைத் தன் வசமாக்கிக் கொள்ள லாம் என்று எண்ணங் கொண்டான் சாணக்கியன். சதித்திட்டமிடுவதில் சாணக்கியன் எப்பொழுதுமே கை தேர்ந்தவன். அவனுக்கு அம்மோதிரம் வேறு கிடைத்து

விட்டதால் திட்டம் எவ்வாறு உருவாகும் என்று சொல்லவா வேண்டும்? பழம் நழுவிப் பாலில் வீழ்ந்த கதையாயிற்று.

## மித்திர பேதம்

பர்வதேசுவரனுடைய ஆபரணங்களெல்லாம் சந்திரகுப்தனுக்குக் கிடைத்துவிட்டன. அவைகளை சத்பாத்திரத்தில் தானம் செய்ய எண்ணமுடையவனாய்த் தகுந்த பிராமணர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புமாறு சாணக்கியனுக்குச் செய்தி அனுப்புகிறான் சந்திரகுப்தன். இது சாணக்கியனுக்குப் பிடிக்கவில்லை. ராட்சஸனை வசப்படுத்த இவ்வாபரணங்களும் ஒரு சமயம் பயன் படக்கூடும் என்று கருதி அரசனிடமிருந்து பரிசாகப் பெற்ற அவ்வாபரணங்களையெல்லாம் தானே அப்பிராமணர்களிடமிருந்து பெற்றுக்கொண்டு அதற்குப்பதிலாக கொஞ்சம் பணத்தைக் கொடுத்துத் திருப்தி செய்து அனுப்பி விடுகிறான் சாணக்கியன். முடிவில் சாணக்கியன் நினைத்தபடி ராட்சஸனை வசப்படுத்த அவ்வாபரணங்களே பெரிதும் பயன்படுகின்றன. சாணக்கியன் போட்ட திட்டம் எப்பொழுதாவது வீணாகுமா? அதில்தான் வல்லவனாயிற்றே! சிறு துரும்பையும் பேராயுதமாக்கி அதைக் கொண்டு ரத்தம் சிந்தாமலே வெற்றியை அடைவதில் சாணக்கியனுக்கு நிகர் சாணக்கியனே. குசுமபுரத்தில் சத்துருக்கள் போடும் சதித் திட்டங்களெல்லாம் அறிந்து அவைகளைச் சாணக்கியனிடம் அறிவிக்க அவனிருப்பிடமே இரகசியமாக வருகிறான் சித்தார்த்தகன். பகைவர்கள் போடும் சதிப்படலம் சாணக்கியனுக்கு நன்கு தெரிய வந்தது. உடனே ராட்சஸன் நம்முடன் நட்பு செய்துகொள்ளச் சம்மதித்திருப்பதாக ராட்சஸன் எழுதுவது போல் ஒரு கடிதத்தைச் சகடதாசனைக் கொண்டு எழுத வைத்து, அதைச் சித்தார்த்தகன் மூலம் மலையகேதுவுக்குக் கிடைக்கச் செய்து, அதனால் மலைய

கேதுவுக்கும் ராட்சஸனுக்கும் உள்ள நட்பைக் கலைத்து விடத் திட்டம் போட்டவனாய் ஓர் வேற்றுக் கடிதத்தைச் சகடதாசனிடம் கொடுத்து, அதில் அவனைக் கொண்டு கடிதம் எழுதுமிடம் போய்ச் சேருமிடம் (அதாவது குறிப்பிட்ட இடத்திலிருந்து குறிப்பிட்டவருக்கு) என்று எழுதி வாங்கி வருமாறு குசுமபுரத்திற்கு அனுப்புகிறான் சாணக்கியன். சகடதாசனிடம் நண்பனாக நடித்து வரும் சித்தார்த்தகனை உண்மைத்தோழன் என்றே கருதி சகடதாசனும் அவ்வாறே எழுதித் தருகிறான். அதைச் சித்தார்த்தகன் சாணக்கியனிடம் சேர்ப்பிக்கிறான். அக்கடிதத்தில் தனது திட்டத்திற்குத் தகுந்தபடி மற்றவைகளையும் எழுதி அதை உறையில் போட்டு ராட்சஸனிடமிருந்து வருவதைப் போல் தோன்றுவதற்காக அதன் மேல் ராட்சஸன் பெயர் கொண்ட முத்திரையையும் போட்டு, அதைச் சித்தார்த்தகனிடம் கொடுத்து, ''நான் சகடதாசன்மீது ராஜத்துவேஷக் குற்றம் சுமத்தி அவனுக்குத் தூக்கு தண்டனை விதித்து விடுகிறேன். அவனைத் தூக்கு வாங்கும் சமயம் நீ அங்கு சென்று ஜாடை காட்டினால் கொலையாளிகள் உடனே அவனை விட்டு விடுவார்கள். உன்னுடைய உதவியினால் உயிர் தப்பியதாக எண்ணி மகிழ்ந்து சகடதாசன் உன்னை ராட்சஸனிடம் அழைத்துச் சென்று, நீ சமயத்தில் செய்த உதவியை அவனிடத்தில் சொல்லுவான். அதனால் ராட்சஸன் உன்னிடம் அன்பு கொண்டு உனக்கு ஆபரணங்களைப் பரிசாக அளிப்பான். நீ சிறிதுகாலம் அங்கேயே இருந்து விட்டுப் பிறகு நான் சொல்லியபடி வேலையைச் செய்து முடிக்க வேண்டும்'' என்று சொல்லிச் சித்தார்த்தகனை அனுப்புகிறான் சாணக்கியன். சித்தார்த்தகனும் அவனிடம் விடைபெற்றுக் குசுமபுரத்தை அடைகிறான்.

உருமயக்க வேலைகள்

ராட்சஸனை வசப்படுத்திக் கொள்வதில் திடீரென மற்றுமொரு உபாயம் சாணக்கியனுடைய மனத்தில் உதய

மாகியது. சந்தனதாசனுடைய வீட்டில் ராட்சஸனுடைய மனைவி வசித்து வருகிறாள். அவனை இங்கு வரவழைத்து ராட்ஸசனுடைய மனைவியை நம்மிடம் ஒப்படைக்குமாறு கேட்போம். அதற்கு அவன் சம்மதித்தால் சரி; இல்லையேல் அவன் மீது ராஜத்துரோகக் குற்றம் சுமத்திச் சந்தன தாசனுக்கும் மரணதண்டனை விதித்துவிட்டால் உடனே தனது பிரிய நண்பனான இவனை விடுவிக்க ராட்சஸன் நம்மிடம் நேரடியாக வந்து அகப்பட்டுக் கொள்வான். ராட்சஸனை வசப்படுத்த இதுதான் சரியான வழி என்று நினைத்துத் தூதர்கள் மூலம் சந்தனதாசனை அழைத்துவரக் கட்டளையிடுகிறான் சாணக்கியன். அதிகாரம் கையிலிருந்தால் எந்தக் கட்டளையையும் பிறப்பிக்கலாம் ; ஜனங்களும் பயந்து அதன்படி நடந்து கொள்ளத்தானே வேண்டும்? சந்தனதாசனைச் சாணக்கியனிடம் அழைத்து வருகிறார்கள். இருவருக்கும் சாதாரணப் பேச்சுவார்த்தை நடக்கிறது. கடைசியாகத் திட்டப்படி ராட்சஸன் மனைவியை ஒப்பிக்குமாறு நயமாகக் கேட்கிறான் சாணக்கியன். தன் வீட்டில் இல்லையென்று மறுக்கிறான் சந்தனதாசன். எவ்வளவு கேட்டும் கொடுக்க இசையவில்லை. எனவே பெருங் கோபம் கொண்டு குடும்பத்தோடு அவனைச் சிறையில் வைத்துவிட உத்திரவு பிறப்பித்து, முடிவாக அப்பொழுதும் அவளைத் தர சம்மதிக்காவிடில் சந்தனதாசனைக் கழுமரத்தில் ஏற்றி விடுமாறு ஆணையிட்டுச் செல்கிறான் சாணக்கியன்.

தூதர்கள் சந்தனதாசனைச் சிறையிலடைத்து விடுகிறார்கள். ''பர்வதேசுவரனுடைய ஆபரணங்களையெல்லாம் ராட்சஸனிடம் அனுப்பி விற்பனை செய்தால் சிறந்த அவ்வாபரணங்களை அவன் விலை கொடுத்து வாங்கி அணிந்து கொள்ளுவான். தனது தந்தையினுடைய ஆபரணங்களை ராட்சஸன் அணிந்திருப்பதன் மூலம் தனது தந்தையின் மரணத்திற்கு இவனே காரணமாக இருக்க வேண்டும் என்று மலையகேது சந்தேகங் கொள்வான். அதனால் ராட்சஸனுக்கும் மலையகேதுவுக்கும் உள்ள

நல்லுறவு உடைந்து விடும்'' என்று மற்றுமொரு சதியா லோசனை செய்து அவ்வாறே நடத்த உத்திரவிடுகிறுன் சாணக்கியன். ''இப்படிப் பல நல்ல தந்திரங்களால் அவ்விருவர்களையும் பிரித்து விட்டால், ராட்சஸன் நம்மிடம் சிக்குவது சுலபம். இல்லையேல் மலைய கேதுவினுடைய சைனிய உதவியைக் கொண்டு ராட்சஸன் நம்மைத் தாக்கி ராஜ்யத்தைப் பிடுங்கிக் கொள்வான்'' என்ற பயம்தான் சாணக்கியனை இப்படியெல்லாம் சதித்திட்டம் போடத் தூண்டுகிறது. சதிக்குமேல் சதி உருவாகிறது. அவர்களைப் பிரிப்பதிலேயே அல்லும் பகலும் தனது அறிவை அள்ளி வீசி வருகிறுன் அந்தண சாணக்கியன்.

## ராட்சஸனின் எதிர்த்தாக்குதலும் தோல்வியும்

குசுமபுரத்தில் சந்திரகுப்தனுடைய நிலை, சாணக்கியன் ராட்சஸனை வசப்படுத்திக் கொள்ளச் செய்யும் முயற்சிகள், சந்திரகுப்தனைக் கொல்வதற்காகச் செய்திருந்த முன்னேற்பாடுகள், ஆகிய எல்லாவற்றையும் இரகசியமாக அறிந்துவர விராதகுப்தன் என்பவன் பாம்பாட்டி வேஷத்தோடு ராட்சஸன் உத்தரவு பெற்று குசுமபுரத்திற்கு வருகிறுன். வீடுவீடாகப் பாம்புகளை வைத்து ஆட்டி மகுடி பிடிப்பதன்மூலம் அங்கு நடக்கும் செய்திகளை யெல்லாம் நன்குணர்ந்து ராட்சஸனிடம் வருகிறுன் விராதகுப்தன். ''நாம் போட்ட திட்டங்கள் எல்லாம் திட்டவட்டமாய் நடந்து வருகின்றனவா?'' என்று ராட்சஸன் கேட்க, ''பிரபோ நான் என்ன சொல்வேன்! யாது உரைப்பேன்! சாணக்கியனின் தந்திரங்கள்தான் என்னே! சந்திர குப்தனைத் தொலைத்துக் கட்ட நம்மவர்கள் அங்கு போட்டிருந்த திட்டங்களெல்லாம் பாழாய் விட்டன. ஒற்றர்கள் மூலம் இங்கு நடக்கும் செய்திகள் யாவும் கடிது பறந்து அடுத்த நிமிடமே சாணக்கியனிடம் செல்லுகின்றன. அத்துடன் சுயபுத்தியையும் வேறு பயன்படுத்திக் கொண்டு

எல்லா விதத்திலும் வெற்றிபெற்று வருகிருன் சாணக்கியன். முடிவாக சந்திரகுப்தன் தன் உயிர்தப்பி வாழ்ந்து வருகிருன். ஒருநாள் சந்திரகுப்தன் வீதியோடு குதிரை சவாரி செய்யும்போது, பந்தல் மேல் மறைந்திருந்து இரும்புத் தடியை அவன் தலைமீது தள்ளி அவனைத் தாக்க நீங்கள் செய்திருந்த தந்திரம் தவிடு பொடியாய் விட்டதன்ருே? இச்செய்தியை முன்னமேயே உணர்ந்து மலையகேதுவின் தம்பியான வீரசேனனைச் சந்திரகுப்தன் போல் அலங்கரித்து, ஊர்வலமாய் வரும் சமயம் அவ்விரும்புத் தடியை அவன் தலையில் விழும்படி செய்து, சந்திரகுப்தனைத் தப்பவைத்து விட்டான் சாணக்கியன். இது மாத்திரமா! நமது தூதுவன் ஒருவன் விஷம் கலந்த ஆகாரத்தைச் சந்திரகுப்தனுக்குக் கொடுக்கச் சென்ற பொழுது அங்கிருந்த சாணக்கியன் தனது மதியூகத்தால் அதில் ஏதோ மோசமிருக்கிறது என்று மனத்தில் கொண்டு அதைப் பரிசோதனை செய்து உண்மை தெரிந்தவுடன் அதைக் கொணர்ந்த தூதுவனையே பலவந்தமாக அருந்தச் செய்து அழித்து விட்டான். இது மட்டுமன்று. நம்முடைய தூதர்கள் இரகசியமாகச் சந்திரகுப்தனைக் கொல்லுவதற்கு அவன் அரண்மனைச் சுரங்கத்தில் பதுங்கி இருந்தனர். அச்சமயம் எறும்புகள் வரிசைவரிசையாகச் சாற்றுப் பருக்கையோடு சுரங்கத்தின் வழியாக வெளிவருவதைக் கண்டு அதனுல் சத்துருக்கள் எங்கேயோ இரகசியமாய் ஒளிந்திருக்கிருர்கள் என்று தந்திரமாக உணர்ந்த சாணக்கியன் அரண்மனையையே தீ வைத்துக் கொளுத்தி விட்டான். அதில் நம்மவர் பலர் படுசாம்பலாய் விட்டனர். இப்படி நாம் அவர்களை அழிக்கச்செய்யும் உபாயங்கள் எல்லாம் சாணக்கியனின் சாமர்த்தியத்தால் நம்மவர்களையே நாசமாக்கி வருகின்றன'' என்று ஒரு பெரிய பிரசங்கத்தையே இராட்சஸன் முன்னிலையில் செய்து முடித்தான் விராதகுப்தன். இவற்றை யெல்லாம் கேட்கக் கேட்க ராட்சஸனுடைய மனம் சற்று கலங்கியது. எனினும் அசையாத உறுதி கொண்ட அவன், எப்படியாவது சத்துருக்களை

வென்றுவிடலாம் என்று மனதைச் சற்றுத் தேற்றிக் கொள்ளுகிருன். ''குசுமபுரத்தில் வேறு ஏதாவது விசேஷங்கள் உண்டா?'' என்று வினவுகிருன் ராட்சஸன். ''பிரபோ! பர்வதேசுவரனை விஷகன்னியைக் கொண்டு கொன்றதாகக் கொலைக் குற்றம் சுமத்தி ஜீவசித்தி என்பவனை நாடுகடத்தி விட்டான் சாணக்கியன். ராஜத்துவேஷ வழக்குப் போட்டு, அரசாங்க விரோதி என்றும் சதிகாரன் என்றும் சொல்லிச் சகடதாசனை மரணதண்டனைக்குள்ளாக்கி விட்டான் மகாபாவி. உங்கள் மனைவியைச் சத்துருவசம் ஒப்படைக்காத காரணத்திற்காக இதுவும் ராஜத்துவேஷக் குற்றமெனக் குறிப்பிட்டுச் சந்தன தாசனையும் சிறையில் தள்ளி விட்டான் சாணக்கியன். இப்படி நம்மவர்களையும் நயவஞ்சமாக நாசம் செய்து, கொடுங்கோலாட்சி செய்து வருகிருன் சாணக்கியன்'' என்று விராதகுப்தனின் மற்றுமொரு குட்டிப் பிரசங்கம் நடக்கிறது. கல்நெஞ்சம் கொண்ட ராட்சஸனின் மனத்தை இப் பிரசங்கம் ஒருவாறு கலக்கியே விட்டது. எவ்வளவு கலங்கியும் உறுதி மாத்திரம் அவன் உள்ளத்தில் ஊன்றிக் கிடந்ததால் ஒருபுறம் தன்னைத்தானே தேற்றிக் கொண்டான். இத்தருணம் மலையகேதுவினிடமிருந்து ஒரு தூதன் இங்கு வந்து, ''மகாராஜா! மலையகேது அவர்கள் தான் அணிந்திருந்த ஆபரணங்களை உங்களுக்குப் பரிசாக அளித்திருக்கிறார்.'' என்று கூறிக்கொண்டே அதை ராட்சஸனிடம் கொடுக்கிருன். களிப்போடு அதை ஏற்றுக் கொண்டு அணிந்து அகமகிழ்கிருன் ராட்சஸன். சிறிது நேரத்திற்கெல்லாம் சகடதாசன் சித்தார்த்தகனை அழைத்துக் கொண்டு இங்குவந்து, ''அரசே! கேளுங்கள் ஒரு ஆச்சரியத்தை! எனக்கு மரணதண்டனை அளிக்கப்பட்டது அல்லவா? அப்பொழுது கொலையாளிகள் என்னைத் தூக்கு மேடையில் ஏற்றிக் கொலை செய்யும் சமயம், இவருடைய கை ஜாடையைக் கண்டு அக்கொலையாளிகள் என்னைக் கொலை செய்யாமலேயே விட்டுவிட்டனர். இவர் அங்கு வராவிடில் என் உயிர் போய் இருக்கும்'' என்று கூறி,

சித்தார்த்தகனை ராட்சஸனுக்கு அறிமுகப்படுத்துகிறான். சாணக்கியனின் தந்திரம் தெரியாமல் சித்தார்த்தகனைத் தங்களுக்கு உண்மை நண்பன் என்றே கருதி, இச் செய்தி கேட்ட சந்தோஷத்தால் தான் அணிந்திருந்த மலையகேது வின் ஆபரணங்களை அவனுக்குப் பரிசாக அளிக்கிறான் ராட்சஸன். பரிசு பெற்ற பிறகு அவைகளை ஒரு மூட்டை யாகக் கட்டி அதன் மேல் ராட்சஸன் பெயர் கொண்ட மோதிரத்தால் முத்திரையிட்டு, அதையும் சாணக்கியன் முன்பு தன்னிடம் முத்திரையிட்டுக் கொடுத்த உறையையும் ராட்சஸனிடம் கொடுத்து, ''இதுஉங்களிடமே இருக்கட்டும் பிரபோ! இதை வேண்டும் பொழுது பெற்றுக் கொள்ளு கிறேன்'' என்று சொல்லுகிறான் சதிகாரச் சித்தார்த்தகன். அதைப் பார்த்தவுடன் ராட்ஸசனுக்குப் பெரும் ஆச்சரிய மாய் இருந்தது. தன் பெயர் கொண்ட முத்திரை இதில் விழுவதற்குக் காரணம் யாது? என்று மனத்தில் நினைத்துக் கொண்டு சித்தார்த்தகனைப் பார்த்து, ''இம்மோதிரம் உனக்கு எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்க, ''நான் குசுமபுரத்தின் வீதியோடு சென்று கொண்டிருந்த பொழுது சந்தனதாசன் வீட்டுவாசலில் தற்செயலாகக் கிடைக்கவே இங்கு எடுத்து வந்தேன்'' என்று சாணக்கியனின்போதனைப் படி தந்திரமாகப் பதில் கூறுகிறான் சித்தார்த்தகன். இன்னும் உண்மை மர்மம் விளங்கவில்லை ராட்சஸனுக்கு. தனது குழந்தை தெருவில் விளையாடும் பொழுது தவறி வீழ, அதை இவன் எடுத்து வந்திருக்கலாம் என்று எண்ணி அசட்டையாக இருந்து விட்டான் ராட்சஸன். சித்தார்த் தகனுக்கு வேண்டிய பொருள்களைக்கொடுத்து அம்முத்திரை மோதிரத்தைத் தான் பெற்றுக் கொண்டு அன்று முதல் அம் முத்திரை மோதிரத்தின் மூலமாகவே தன் கடிதப் போக்கு வரத்து யாவையும் நடத்திவருமாறு கூறி அதைச் சகடதா சனிடம் கொடுக்கிறான் ராட்சஸன். சித்தார்த்தகன் அது முதல் சாணக்கியனின் சதியாலோசனைப்படி ராட்சஸ னிடமே இருந்து அவன் அன்பை தன் மீது வளர்த்துக் கொண்டே வருகிறான்.

ஒருநாள் முன் கூறிய யோசனைப்படி சாணக்கியனுடைய ஒரு தூதன் பர்வதேசுவரனுடைய ஆபரணங்களை ராட்சஸனுடைய முன்னிலையில் கூவி விற்கிறுன். அதிலுள்ள சூதைத் தெரிந்து கொள்ளாமல் ஏராளமாகப் பணங்கொடுத்து அதை விலைக்கு வாங்கித் தன் கழுத்தில் அணிந்து கொண்டான் ராட்சஸன். இவன் இன்று அணிந்த ஆபரணம் தான் சித்தார்த்தகனுக்குப் பரிசாகக் கொடுத்த ஆபரணம் சீல் வைத்த கவர் அகிய இவைகள் ராட்சஸன் சந்திரகுப்தனுடன் உடன்பாடு செய்து கொள்ளச் சித்தமாய் இருக்கிறுன் என்ற சந்தேகத்தை மலையகேதுவுக்குப் பிறகு மலைபோல் வளர்த்து விடுகின்றன. அதற்காகத் தான் சாணக்கியன் சித்தார்த்தகனைக் கொண்டு இவ்வளவு முன்னேற்பாடுகளைச் செய்து வருகிறுன். சதித்திட்ட மிடுவதில் ராட்சஸன் பின்வாங்கியவன் அல்ல. விதிதான் அவனுக்குச் சதி செய்து வருகிறது. விதி சதி செய்தால் மனித சக்தி ஒன்றும் பயன் படுவதில்லை. இருந்தும் சளைக்காமல் புதியதொரு சதித்திட்டத்தை உருவாக்கிக் கொள்ளுகிறுன். சந்திரகுப்தனையும் சாணக்கியனையும் பிரிக்காவிடில் என்றுமே நம்மால் வெற்றிகாண முடியாது. அவர்களைப் பிரிப்பதில் உபாயத்தைக் கையாண்டு நாம் வெற்றி கண்டால்தான் நம் மனோரதம் சித்திக்கும். சாணக்கியனுடைய சகாயமின்றிச் சந்திரகுப்தனுல் என்ன செய்ய முடியும்? வெறும் விளையாட்டுப் பொம்மையே' என்று எண்ணியவனுய்க் குசுமபுரத்திலிருக்கும் ஸ்தனகலசனை குடுகுடுப்பை வேஷத்தோடு சந்திரகுப்தனிடம் அனுப்பி, ஏதோ குறி சொல்லுவது போல் அவர்களிடையே உறவை உடைத்தெறிந்து வருமாறு விராதகுப்தனைப் பார்த்து உத்தரவிடுகிறுன் ராட்சஸன்.

## வேற்றுமை நாடகம்

உண்மையில் தந்திரத்தில் ராட்சஸன் தாழ்ந்தவனல்ல. இருந்தாலும் இவனுடைய தந்திரங்களெல்லாம் தந்திரசாஸ்திரத்தை இயற்றித் தனிப்பெருமை தாங்கிய சாணக்கியனிடமா பலிக்கப் போகிறது? சாணக்கியதந்திரம் என்று உலகமே இன்று அதற்குத் தனிப்பெருமை தந்து வருகிறது அல்லவா? சந்திரகுப்தனும் சாணக்கியனும் ஏதோ வழக்கம் போல் பேசிக் கொண்டு குசுமபுரத்தில் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு இருக்கிறார்கள். சட்டென ஓர் யுக்தி அவனுக்கு உதயமாகிறது. சந்திரகுப்தனைப் பார்த்து, ''இனி புதியதொரு திட்டமிட்டு நாமிருவரும் நாடகம் போடவேண்டும். அதன்படி நாமிருவரும் எப்போதும் போல் நண்பர்களாகவே இருந்தால் பகைவர்களின் இரகசியங்களை அறிவது அரிதாகிவிடும். ஏதோ அபிப்பிராயபேதம் காரணமாக நாமிருவரும் ஒருவரை ஒருவர் விட்டுவிலகியது போல் நடந்து கொள்வோம். இச் செய்தி எங்கும் பரவி ராட்சஸனிடமும் எட்டிவிடும். உடனே உன்னுடன் சமாதானம் செய்து கொள்ளச் சில இரகசிய சமாசாரங்களை உரைப்பான் ராட்சஸன். அதையறிந்து அதன் மூலம் நம்முடைய காரியத்தை முடித்துக் கொள்ளலாம்'' என்பதுதான் சந்திரகுப்தனிடம் சாணக்கியன் கூறிய சதித்திட்டமாகும். இருவரும் அப்படியே ஒப்புக் கொண்டனர். சாணக்கியன் எதைச் சொன்னாலும் அதுதான் சந்திரகுப்தனுக்கு வேதவாக்கியம். பெயருக்கு மாத்திரம் சந்திரகுப்தன் அரசன். நடத்தி வருவதெல்லாம் சாணக்கியன்தான். அப்படியே சந்திரகுப்தனும் சாணக்கியனும் சண்டை செய்து பிரிந்து விட்டதாக ஊரெங்கும் ஓர் செய்தி உலாவுகிறது. கௌமிதி உற்சவம் என்ற ஒரு விழாவை நடத்த சந்திரகுப்தன் ஏற்பாடுசெய்ய உத்தரவு

போடுகிறான். அது கூடாது என்று மறு உத்தரவு சாணக்கியன் மூலமாகப் பிறப்பிக்கப்படுகிறது. உடனே இருவரும் ஒன்று கூடுகின்றனர். தனது அதிகாரத்தில் தலையிட்ட காரணத்தினால் தான் பதவியிலிருந்து விலகுவதாகப் பாசாங்கு செய்து தனது பதவியைப் பறிகொடுக்கிறான் சாணக்கியன். ராட்சஸனிடமிருந்து வேவு பார்க்க இங்கு வந்திருந்த ஸ்தனகலசன் என்ற ராட்சஸதூதன் இவ்விருவரும் பிரிந்து விட்ட செய்தியை உண்மையென நினைத்துக் கொண்டு 'இச்சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு மேலும் அவர்களுடைய உறவை அடியோடு முறியடித்து நமது வேலையை முடித்துக் கொள்ளலாம்' என்று அசட்டுத் திட்ட முள்ளவனாய்ச் சந்திரகுப்தனிடம் வந்து அவனைப் பலவாறு துதிசெய்கிறான். சந்திரகுப்தனும் சாணக்கியனிடம் பெருங்கோபம் கொண்டிருப்பது போல் காண்பித்து ஸ்தனகலசனுக்கு வேண்டிய பொருள்களைச் சன்மானமாகக் கொடுத்து சாணக்கியனின் கோபத்தைத் தூண்டி விடுகிறான். சாணக்கியனோடு ஏற்பட்ட கருத்து வேற்றுமையைத் தூதுவனிடம் கூறுகிறான் சந்திரகுப்தன். இவ்வளவும் ஸ்தனகலசனை யாரெனத் தெரியாமல் சந்திரகுப்தன் செய்யவில்லை. 'இப்படி நடந்து கொண்டால் ஒற்றனை இவன் மூலம் இவ் வேற்றுமை நாடகம் ராட்சஸனுக்குத் தெரிந்து நமது காரியம் கைகூடும் என்ற திட்டத்தின் பேரில்தான் சந்திரகுப்தன் செய்யலானான். இக்கபட நாடகத்தைப் பாவம் தூதன் எங்ஙனம் உணரப் போகிறான்? தான் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது என்று சொல்லுவது போல் இவையெல்லாம் பகைவர்களுக்குத் தீமையாகவே கடைசியில் முடிகிறது. இவ்வூரில் உலாவும் இவ்வேற்றுமைச் செய்தியைக் கரபகன் மூலம் ராட்சஸனுக்குச் சொல்லுகிறான் ஸ்தனகலசன்.

## மித்திரபேத சூழ்ச்சி

அழகியதோர் ஆசனம். 'நம்முடைய திட்டங்களெல்லாம் பகைவர்களிடம் ஒன்றும் பலிக்காமல் போய் விட்டனவே' என்று பரிதாபமான கோலத்துடன் அதில் வீற்றிருக்கிறான் ராட்சஸன். அவன் அருகாமையில் ஆருயிர்த் தோழனான சகடதாசன் நின்று கொண்டு ஏதோ ஆறுதல் பேச்சுக்களைச் சொல்லிக் கொண்டிருக்கிறான். இத்தருணம் கரபகன் என்ற தூதன் ஸ்தனகலசனால் அனுப்பப்பட்டு இங்கு வந்து வணங்கி இவ்வாறு கூறலானான்: ''பிரபோ ! ஓர் ஆச்சர்யம் தெரியுமா? சந்திரகுப்தனும் சாணக்கியனும் கருத்து வேற்றுமை கொண்டு பிரிந்து விட்டனர். பகைவர்களை ஒழித்துக்கட்ட இதுதான் நமக்கு நல்ல தருணம்; இதைப் பக்குவமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்'' என்று ஸ்தனகலசன் சொல்லி அனுப்பிய செய்தியை தெரிவிக்கிறான் கரபகன். இதனால் ராட்சஸன் மிக்க களிப்படைந்தான் என்று சொல்லவும் வேண்டுமோ? சாணக்கியனின் சாதுர்யமும், அவன் நடத்தும் கபட நாடகங்களும் அவ்வளவு சுலபமாக ராட்சஸனுக்குப் புரிந்து விடப் போகிறதா? அப்படிப்பட்ட திறமை இருக்குமானால் ராட்சஸன் ஏன் பகைவர்களிடம் சிக்கிச் சீர்குலைய வேண்டும் ?

இப்படி இருக்க மலையகேது பாகுராயணனுடன் ராட்சஸனைக் காண இங்கு வருகிறான். ஏற்கனவே ராட்சஸன் பகைவர்களோடு உறவு கொள்ளச் சித்தமாக இருக்கிறான் என்று பகைவர்களின் சூழ்ச்சியினாலும் நம்பத் தகுந்த சூழ்ச்சிகளாலும் தப்பபிப்பிராயம் கொண்டிருந்த மலையகேதுவுக்குச் சகடதாஸனும் ராட்சஸனும் பேசிக் கொண்டிருந்த அக்காட்சி சந்தேகத்தைச் சற்று அதிகமாகத் தூண்டிற்று. இருவரும் ராட்சஸனுக்குத் தெரியாமல்

தலைமறைவாக நின்று கொண்டு ராட்சஸனுடைய பேச்சுக்களைக் கேட்டு வருகிறார்கள் "இனி பய மில்லை. சாணக்கியன் தன் நண்பனான சந்திரகுப்தனை விட்டுப் பிரிந்து விட்டான். அப்பாவியான சந்திரகுப்தனை வெல்லுவது எவ்வளவு மாத்திரம்? பாவம் அவனை வென்று தான் என்னபயன்? நமக்கு அவனோடு விரோதமும் இல்லையே சாணக்கியனால் அல்லவா நாம் சந்திரகுப்தனை விரோதித்துக் கொண்டோம்" என்று மலையகேதுவின் சந்தேகத்துக்குத் தகுந்தபடிச் சகடதாசனிடம் பேசிக் கொண்டிருக்கிறான் ராட்சஸன். இது மலையகேதுவின் செவியில் வீழ்ந்தது. இனியும் ராட்சஸன் சந்திரகுப்தனோடு உறவாடச் சித்தமாய் இருக்கிறான் என்பதில் எப்படித்தான் மலையகேதுவினால் சந் தேகம் கொள்ளாமல் இருக்க முடியும்? மலையகேதுவின் சந் தேகம் வலுத்தது. உண்மையில் பார்க்கப்போனால் ராட்ச ஸன் கனவிலும் பகைவர்களோடு உறவைக் கருதுகிற வனல்ல. சூழ்நிலை அவ்வாறு அவனைச் சந்தேகிக்கச் செய் கிறது. சமீபத்திலிருந்த பாகுராயணன் "பார்த்தாயா! நம்மை ஏமாற்றி நமக்குத் தெரியாமலே ராட்சஸன் பகை வர்களோடு சமரஸம் செய்து கொள்ளப் பார்க்கிறான்" எனச் சொல்லி மலையகேதுவின் கோபத்தைத் தூண்டி விடு கிறான் பாகுராயணன் சாணக்கியனின் சரன். சமய சந் தர்ப்பங்களைப் பயன் படுத்திக் கொண்டு தனது காரி யத்தைச் செய்துவருவதல்லவா ஒற்றர்களின் கடமை? சிறிதுநேரம் செல்ல மலையகேதுவும் பாகுராயணனும் கோபா வேசமாக ராட்சஸன் இருப்பிடம் வருகிறார்கள். அங்கு போடப்பட்டிருந்த ஆசனத்தில் இவர்களை அமரச்செய்கிறான் ராட்சஸன். சிறிது நேரம் வரை எல்லோரும் பல விஷயங் களைப் பேசிவிட்டு முடிவாகக் குசுமபுரத்தின் மீது படை யெடுத்துச் சந்திரகுப்தனை ஒழித்து விடவேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர். கோபத்தை வெளியில் காண்பித்துக் கொள்ளாமல் சரியென்று சொல்லி மலையகேதுவும், பாகு ராயணனும் தன்னிருப்பிடமே வருகிறார்கள். முறையே ராட்சஸனிடம் உள்ள நம்பிக்கை விசுவாசம் மலையகேது

வுக்கு குறைந்து கொண்டே வருகிறது ஒரு புறம். மற்றொரு புறம் கபட நண்பனான பாகுராயணன் அவ்வெண்ணத்தை வலுக்கச் செய்து தனது கடமையை நிறைவேற்றி வருகிறான்.

ஜீவசித்தி என்பவன் ராட்சஸன் இருப்பிடம் வருகிறான். ராட்சஸனை ஏமாற்றி அழிப்பதே இவனுடைய கருத்தாக இருந்து வருகிறது. ஜீவசித்தியைப் பார்த்து யுத்தம் ஆரம்பிக்க நல்ல முகூர்த்த நாள் சொல்லும்படி ராட்சஸன் கேட்க, அதற்கு எந்த நாளில் யுத்தம் செய்தால் ராட்சஸன் நிச்சயமாகத் தொலைந்து போவானோ அப்படிப்பட்ட நாளைச் சொல்லிவிட்டுச் சென்று விடுகிறான் ஜீவசித்தி. நண்பன் என்ற முறையில் ராட்சஸன் அதை நம்பத்தானே வேண்டும்? கபட நாடகம் தெரியாதவரை யாரும் எவரையும் எப்படிச் சந்தேகம் கொள்ளமுடியும்?

## சதி வலுக்கிறது

‘‘முத்திரை பொறித்த கடிதத்தைக் கொண்டு மலையகேதுவுக்கும் ராட்சஸனுக்கும் உள்ள நட்பை உடைத்தெறிந்து விடவேண்டும்’’ என்று முன்பு சாணக்கியன் சொல்லியிருந்த விஷயம் திடீரெனச் சித்தார்த்தகனுக்கு நினைவு வந்தது. அதற்கேற்றபடி இச்சதித்திட்டத்தை நம்பும்படியாகச் சில சம்பவங்களும் சூழ்நிலைகளும் இவர்களுக்கு ஏற்படலாயின. மலையகேதுவும், ராட்சஸனிடம் சற்று கோபம் கொண்டவனாக இருக்கிறான். இத்தருணம் ‘இக்கடிதம் வேறு மலையகேதுவுக்குக் கிடைத்து விட்டால் நம் சதி உருவாகி ஒரு முடிவு காணலாம்’’ என்று கருத்துக் கொண்ட சித்தார்த்தகன் ராட்சஸனிடமிருந்து முத்திரை பதித்த உறை, தனக்குப் பரிசாகக் கிடைத்த ஆபரணம், ஆகியவற்றைப் பெற்றுக் கொண்டு புறப்படுகிறான் மலையகேதுவிடம். நடுவழியில் ஜீவசித்தியும் சித்தார்த்

தகனும் சந்திக்கின்றனர். ''என்னப்பா இவ்வளவு வேகமாகச் செல்கிறாய்? என்ன விசேஷம்?'' என்று கேட்கிறான் ஜீவசித்தி. குசுமபுரம் செல்வதாகப் பதில் கிடைக்கிறது. ''என்னப்பா ! இது உனக்குத் தெரியாதா? ராட்சஸன் தூதர்கள் மூலம் சந்திரகுப்தனுடன் சமாதானம் செய்து கொள்ள விரும்புகிறான் என்ற சந்தேகத்தால் குசுமபுரம் செல்லவேண்டுமானால் தன்னிடமிருந்து அனுமதிச்சீட்டைப் பெற்றுத்தான் செல்லவேண்டும் என்று உத்தரவு பிறப்பித்து அப்படியே அங்கு செல்வோரைச் சோதனை போடுவதற்காக நகர வெளியில் பாகுராயணனுடன் மலையகேது உட்கார்ந்து கொண்டிருக்கிறான். வேண்டுமானால் உனக்காக நானே சென்று அனுமதிச்சீட்டு பெற்றுவருகிறேன்'' எனச்சொல்லி மலையகேதுவினிடம் வருகிறான் ஜீவசித்தி. ''சித்தார்த்தகன் குசுமபுரம் வருவதற்கு முன்னால் விஷகன்னிகையைத் தயார் செய்யச் சொல்லி அதனால் ராட்சஸன் பர்வதேசுவரனைக் கொன்று விட்டான் என்ற செய்தியைத் தெரிவித்து ராட்சஸனிடம் மலையகேதுவிற்கு உள்ள கோபத்தைத் தூண்டிவிட வேண்டும்'' என்பதுதான் ஜீவசித்தியின் திட்டம். சித்தார்த்தகனுக்காக அனுமதிச்சீட்டு பெற ஜீவசித்தி அக்கறை காட்டுவதும் இக்காரணத்திற்காகத்தான்.

## மலையகேதுவின் சீற்றம்

இடம் : குசுமபுரத்தின் வெளிப்புறம். ஜீவசித்தி அங்கு வருகிறான். அவனைப் பார்த்து ''என்னப்பா ! ராட்சஸன் வேலையாகக் குசுமபுரம் செல்கிறாயோ?'' என வினவுகிறான் மலையகேது. தானும் ராட்சஸனிடம் கோபம் கொண்டிருப்பது போல் அவனிடம் தெரிவித்து உண்மையை அறிய எண்ணி, ''ராட்சஸனுடைய காரியமாக அல்ல. அந்த அதிகார கர்வம் பிடித்த ராட்சஸனை யார் நான் நம்புவார்கள்'' என்று சொல்லி நடிக்கிறான் ஜீவசித்தி. உடனே ''ஏனப்பா உனக்கு ராட்சஸனிடம் இத்தனை

கோபம்! என்ன நடந்து விட்டது?'' என்று மலையகேது கேட்க, ''பிரபோ ! இது உங்களுக்குத் தெரியாதா? நண்பன் என்று சொல்லிக் கொண்டே விஷகன்னிகையின் உதவியால் உங்கள் தந்தையான பர்வதேசுவரனை ராட்சஸன் கொன்று விட்டான். இதையும் அறியாமலா நீங்கள் இருக்கிறீர்கள்?'' என்று ஜீவசித்தி சொல்லிச் சென்று விடுகிறான். மலைய கேதுவின் மனம் பதைபதைக்கிறது. ''சாணக்கியனல்லவா என்னுடைய தந்தையின் மரணத்திற்குக் காரணம் என்று இதுவரை அறியாமையால் எண்ணி வந்தேன் ! இந்த ராட்சஸப் பயலா என் தந்தையைக் கொன்று விட்டான்?'' என்று சொல்லிச் சீறுகிறான். இச்சமயத்தைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ள எண்ணிய சித்தார்த்தகன் ''அனுமதிச்சீட்டு இன்றி நான் நகருக்குள் செல்ல முயன்றால் மலையகேது என்னைச் சோதனை போடுவான். அப்போது என்னிடமுள்ள முத்திரையிட்ட கடிதமும் மலையகேதுவின் ஆபரணங்களும் அவனிடம் சிக்கிக் கொள்ளும். அவை மலைய கேதுவின் மயக்கத்தை மலை போல் ஆக்கிவிடும்'' என்று திட்டமிட்டவனாய் அவ்வாறே செய்கிறான். அவன் கருதிய படியே அனுமதிச் சீட்டின்றிச் செல்லும் இவனைக் காவலா ளர்கள் கையும் களவுமாகப் பிடித்து மலையகேதுவினிடம் கொண்டு வருகிறார்கள். ''அனுமதியின்றி எப்படிச் சென்றாய்?'' என்று மலையகேதுவும் பாகுராயணனும் கேட்க, ''ராட்சஸனால் அனுப்பப்பட்டுக் குசுமபுரம் அவசர வேலையாகச் செல்லுகிறேன்'' என்றான் சித்தார்த்தகன். அவனிடமிருந்து கடிதம் ஆபரணம் ஆகியவைகள் பறிமுதல் செய்யப்படுகின்றன. பாகுராயணன் கையில் கடிதம் சிக்கு கிறது. மலையகேதுவின் உத்தரவுப்படி சீலை உடைக்காமலே கடிதத்தைப் படிக்கிறான். ''உன்னிடம் நட்புக் கொள்ள நான் சித்தமாக இருக்கிறேன். நீ அனுப்பிய பரிசுகள் கிடைத்தன. நான் உனக்கு அனுப்பிய பரிசுகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும். பத்திரகடன் முதலிய சிற்றரசர்களை வென்ற பிறகு ராஜ்யத்தில் பங்கு தரவேண்டும்; மற்றவைகளை இத்தூதன் மூலம் நேரில் தெரிந்து

கொள்ளலாம்'' என்பது கடிதத்தின் வாசகம். மலேய கேதுவின் மனதைக் கலக்கிவிட்டது இக்கடிதம். ராட்சஸன் தனக்குத் துரோகி என்று முடிவாகத் தீர்மானம் செய்து கொண்டான். ''உண்மையில் இக்கடிதம் எழுதியது சகடதாசன்; எனினும் ராட்சஸனுடைய முத்திரை மேலே பதிந்திருப்பதால் இது ராட்சஸனுடைய கடிதம்தான்; சந்தேகம் இல்லை'' என்றும் நினைத்து விட்டான். சமயமும் சூழ்நிலையும்தான் மனிதர்களை நண்பர்களாகவும் பகைவர் களாகவும் செய்கின்றன. இதில் உண்மைக்கு இடமெங்கே? சித்தார்த்தகனை மிரட்டி நடந்தவற்றைக் கூறுமாறு கேட்க அதற்குப் பயந்தவன் போல் நடித்துப் பாசாங்கு செய்ய, வேலைக்காரர்கள் அவனைக் கட்டி அடிக்கிறார்கள். அப்பொழுது அவனுடைய இடுப்பி லிருந்து ஒரு மூட்டை நழுவி கீழே வீழ்ந்தது. அவனை இழுத்துக் கொண்டு காவலாளிகள் மலேயகேதுவினிடம் வந்து அந்த மூட்டையைத் தருகிறார்கள். அதன்மேல் ராட்சஸன் பெயர் கொண்ட முத்திரை போடப்பட் டிருந்தது. அதை உடைக்காமலே பிரித்துப் பார்க்கிறான். தான் ராட்சஸனுக்குப் பரிசாக அனுப்பிய ஆபரணங்கள் அதில் இருந்தன. ''அவைகளைச் சந்திரகுப்தனுக்கு நட்பு செய்து கொள்ளுவதற்கு அடையாளமாக ராட்சஸன் பரி சாக அனுப்பியிருக்கிறான்'' என்று எண்ணினான் மலேயகேது. வேலைக்காரர்களிடமிருந்து அடி தாங்காமல் உண்மை சொல்லுவதுபோல் நடித்து ''ராட்சஸன்தான் இவைகளைச் சந்திரகுப்தனிடம் கொடுத்து வருமாறு என்னைத் தூது அனுப்புகிறான்'' என்று சொல்லுகிறான் சித்தார்த்தகன். ராட்சஸன் பெயர் வைத்த முத்திரைக்கடிதம், ஆபரணங் கள், சகடதாசனுடைய கையெழுத்து, சித்தார்த்த கனுடைய போலி வாக்குமூலம் இவைகளெல்லாம் ஒன்று சேர்ந்து மலேயகேதுவின் தப்பு எண்ணத்தை வளர்த்து விட்டன. இதற்குத் தகுந்தபடி பாகுராயணனும் தூபம் போடுகிறான் மலேயகேதுவுக்கு. துர்மந்திரிகள் கூடவே சேர்ந்து விட்டால் எவனும் சீக்கிரமாக அழிந்து விடுவான்.

அதற்கேற்ருற்போல் விதியும் சதி செய்கிறது. ராட்சஸனை இங்கு அழைத்து வருமாறு கட்டளையிடுகிருன் மலையகேது. கள்ளங்கபடம் அறியாத ராட்சஸன் ''சந்திரகுப்தனுடன் போர் தொடங்கும் உத்தேசத்துடன் தன்னை அழைத்திருக்கிருன்'' என்று உண்மையாக எண்ணி மலையகேதுவினிடம் வருகின்ருன்.

### போர் யோசனை மாறுகிறது

பர்வதேசுவரனுடைய ஆபரணங்களைக் கழுத்தில் அணிந்திருந்த ராட்சஸனைக் கண்டான் மலையகேது. இது சந்திரகுப்தன் இவனுக்குப் பரிசாக அனுப்பிய ஆபரணங்கள் தான் என்பது மலையகேதுவின் எண்ணம். அங்கு சித்தார்த்தகனையும் அவன் உறை, ஆபரணம் எல்லாவற்றையும் ராட்சஸனிடம் காட்டி, ''இவையெல்லாம் உண்மைதாஞ?'' என்று கேட்கிருன் மலையகேது. இது சாணக்கியனுடைய சூழ்ச்சி என்று பதில் கிடைக்கிறது. ''அப்படியாஞல் இக்கடிதம் எழுதியது யார்?'' என்று மறுகேள்வி பிறக்க, ''நான் எழுதவில்லை'' என்று மறுபதில் பிறக்கிறது. ''இது சகடதாசனின் கையெழுத்துதானே?'' என்று கேள்வி. ''ஆம்'' என்ற பதில். பல கேள்வி பதிலுக்குப் பிறகு இது சத்ருக்களின் சதி என்று பலவாறு சொல்லியும் மலையகேதுவுக்கு நம்பிக்கை அளிக்கவில்லை. மனத்தில் முதலில் ஒன்று பதிந்து விட்டால் அதை மாற்றுவது அவ்வளவு சுலபமல்ல. இதெல்லாம் ''நம்முடைய கெட்டகாலம்'' எனக்கருதிச் சென்றுவிடுகிருன் ராட்சஸன். சந்திரகுப்தன் மீது படையெடுக்க வேண்டும் என்று இருந்த விருப்பம் மாறிவிடுகிறது.

## தற்கொலை வேஷம்

இடம்: குசுமபுரம். அதன் வெளியில் ஒரு பூந்தோட்டம். அதிலொரு ஒற்றைப்பாதை. அங்கு தலை குனிந்து கவலைக்குறியுடன் உட்கார்ந்து கொண்டிருக்கிறான் ராட்சஸன். ''இதுவரை மலைபோல் நம்பியிருந்த மலையகேதுவும் பகைவர்களின் சதி வேலையால் என்னைப் பகைத்துக் கொண்டு விட்டான். எல்லாம் என்னுடைய காலபலன். யாரை நொந்து என்ன பயன்?'' என்று ஒரு புறம் எண்ணம் ஓடுகிறது. ''நடந்ததைச் சிந்தித்து என்ன பயன்? இனி நடக்கப் போவதைக் கவனிப்போம். எனக்காக மரண தண்டனைப் பெற்று உயிர் துறக்கப் போகும் என் ஆருயிர் நண்பன் சந்தனதாசனின் நிலையை உணர்ந்து அவனை மீட்க முயற்சி எடுக்கவேண்டும்'' என்று எண்ணித் தனது கவனத்தை மற்றொரு புறம் திருப்புகிறான் ராட்சஸன். அச்சமயம், ''சந்தனதாசனுக்கு அளித்திருக்கும் மரண தண்டனைச் செய்தியை ராட்சஸன் உணர்ந்தால் உடனே நண்பனைக் காக்க கொலைக்களத்துக்கு ஓடி விரைவான். பிறகு ராட்சஸன் பிடிபடுவது எளிதாகிவிடும்'' என்று திட்டம் போட்டு சாணக்கிய தூதனை ஒரு வேலைக்காரன் ராட்சஸன் முன்னிலையில் ஒரு கயிற்றைக் கழுத்தில் இறுக்கித் தற்கொலை செய்வது போல வேஷம் போடுகிறான். இதைக் கண்ட ராட்சஸன் சூழ்ச்சி அறியாமல் மனமிரங்கி ஓடிவந்து, ''ஏனப்பா தற்கொலை செய்து கொள்கிறாய்? என்று சகஜமாகக் கேட்க, ''சந்தனதாசனை ராஜத்துவேஷக் குற்றம் காரணமாகத் தூக்கு மேடைக்கு அழைத்துச் சென்று விட்டார்கள் தூதர்கள். அதையறிந்த அவனுடைய நண்பனான விஷ்ணுதாசன் என்பவன் அவனை மீட்க வழி தெரியாமல் நெருப்பில் வீழ்ந்து உயிரை மாய்த்துக் கொள்ள உறுதி கொண்டு விட்டான். ''என் நண்பன்

விஷ்ணுதாசனைப் பிரிந்து உயிருடன் வாழ விருப்பம் இல்லாதவனாய் இவ்வாறு செய்யத் துணிந்தேன்'' என்று நம்பும்படியாகச் சொல்லி தூதன் நம்பவைக்கிறான் ராட்சஸனை. நடிப்பு பிரமாதமாக இருந்தால் எது உண்மை எது பொய் என்பதைக் கண்டு கொள்ள யாரால்தான் முடியும்?

உடனே ராட்சஸன் சந்தனதாசனை மீட்க எண்ணிக் கொலைக்களத்திற்கு அலங்கோலமாக ஓடுகிறான். தற்கொலை நாடகத்தை நயம்பெற நடித்த அந் நயவஞ்சகத் தூதன் இதற்குள்ளாகச் சாணக்கியனிடம் சென்று நடந்ததைத் தெரிவிக்கிறான்.

### ராட்சஸன் கைதும் சரணாகதியும்

சித்தார்த்தகன், சமித்தார்த்தகன் என்ற இரு சாணக்கிய தூதர்களும் கொலையாளி வேஷத்தோடு சந்தன தாசனைக் கொலைக்களத்திற்கு இழுத்து வருகிறார்கள். சந்தனதாசனுடைய மனைவி குடும்பினி என்பவள் தன் மகனை அழைத்துக் கொண்டு கதறிக் கொண்டே அவனைப் பின் தொடர்கிறாள். அங்கு என்ன நடக்கப் போகிறது என்ற ஆவல் தூண்டியவனாய் ஓர் இடத்தில் தலைமறைவாக இருந்து பார்த்துக் கொண்டிருக்கிறான் ராட்சஸன். உயர்ந்த தூக்குமேடை ; பார்த்தாலே பயங்கரம்; அதன் மேல் நிற்கிறான் சந்தனதாசன். ''கடைசி முறையாகக் கேட்கிறோம். ராட்சஸன் மனைவி எங்கிருக்கிறாள்? சொல்லி விடு'' என்ற கேள்விகள் சரமாரியாய் நான்கு பக்கங்களி லிருந்தும் வந்து வீழ்ந்து அவன் காதுகளைத் துளைக்கின்றன. ''என் உயிரை வேண்டுமானாலும் விடச் சித்தமாக இருக் கிறேன். ஆனால் என் நண்பனுக்குத் துரோகம் ஒரு

பொழுதும் மனத்தாலும் செய்ய இயலமாட்டேன்'' என்ற பதில் கம்பீரமாக வருகிறது. சூலத்தில் அவனை ஏற்று கிறார்கள். அவனுடைய முடிவு நெருங்கிவிட்டது. பார்த்தான் ராட்சஸன். உடனே பாய்ந்து ஓடிவந்து, ''என்னை வேண்டுமானால் கழுவில் ஏற்றுங்கள். எனக்காக உயிரையே தியாகம் செய்யத் துணிந்த என் நண்பன் இக்கதிக்கு உள்ளாவதைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன்'' என்று சொல்லி, கொலையாளிகளின் கையில் தானாகவே சிக்கிக் கொள்கிறான் ராட்சஸன். சந்தனதாசனை விட்டு விட்டு ராட்சஸனைக் கட்டி சாணக்கியனிடம் அழைத்து வருகிறார்கள். இதைக் கண்ட சாணக்கியன் ஆனந்தக் கடலில் மூழ்கினான் என்று சொன்னால் மாத்திரம் போதுமா? தான் இவ்வளவு நாட்களாக ராட்சஸனைப் பிடிப்பதற்காகச் செய்து வந்த சதி வேலைகளையெல்லாம் ஒரு பெரிய சரித்திரம் போல் அவனிடம் சொல்லி, அவனைச் சந்திரகுப்தனின் மந்திரியாக இருக்குமாறு சொல்லி, வாளை அவன் கையில் கொடுக்கிறான் சாணக்கியன். அன்று முதல் ராட்சஸனும் ஒரு மந்திரியானான். இதனிடையே பாகுராயணன் மலையகேதுவுக்கு அந்தரங்கனாக நடித்துக் கொண்டு ஒருநாள் திடீரென அவனைக் கட்டி சாணக்கியனிடம் அழைத்து வருகிறான். ராட்சஸனுடைய விருப்பப்படி அவனையும் விடுவித்து அவனைத் தன் நாட்டிற்கு அனுப்பிவிடுகிறான் சாணக்கியன். சாணக்கியனையும் ராட்சஸனையும் பிரதான மந்திரிகளாகக் கொண்டு சந்திரகுப்தன் அழகாய் அரசு புரிந்து வந்தான் □□

# தபதீ ஸம்வரணம்

இமயமலை. அதன் தெற்கே கங்காநதி. அதன் கரையில் அஸ்திஞபுரம் என்ற அழகிய சரித்திரப் புகழ் வாய்ந்த பட்டினம். குருவம்சத்தில் உதித்த ஸம்வரணன் என்ற அரசன் அதற்குத் தலைவன். சால்வராஜன் மகள் சுமதி என்பவள் இவனுடைய மனைவி. அரச தம்பதிகள் இனிது இல்லறம் நடத்தி வருகிறார்கள். பல நாட்கள் சென்றும் பிள்ளைப்பேறு பெருத ஸம்வரணனுக்கு மன நிம்மதி ஏற்படவில்லை. வாழ்க்கையும் ருசிக்கவில்லை. புத்திர பாக்கியமன்றோ எல்லா பாக்கியங்களையும் விட மேலான பாக்கியம்! அதைப் பெருத ஒருவன் மற்ற எதைப் பெற்றும் பயனென்ன? மற்ற இன்பங்களை இன்பமாக்கச் செய்வது மகனைப் பெறுதலன்றோ! இம்மை மறுமை இரண்டிலும் இன்பத்தை அளிப்பது புத்திர பாக்கியமென சாஸ்திரம் சொல்லுகிறது. மகனைப் பெறுவதற்காக மகாராணி சுமதி செய்து வந்த விரதங்கள் அனைத்தும் காட்டில் காய்ந்த நிலவுபோல் வீணுயின. கணவனிடம்

விடைபெற்றுப் புத்திர சந்தானத்திற்காக தவம் செய்யக் கானகம் செல்லுகிறாள் சுமதி. தவம் வெகு உக்கிரமாக நடக்கிறது. சூரியபகவான் ஒரு நாள் அரசனுடைய சொப்பனத்தில் வந்து, ''அரசே! நீ வீணாகக் கவலைப்படாதே! எவ்வளவு தவம் செய்தாலும், சுமதியின் மூலம் புத்திர பாக்கியம் உனக்குக் கிடைக்கப் போவதில்லை'' எனக்கூறுகிறான். நித்திரை கலைந்து பொழுது விடிகிறது; நண்பனான விதூஷகன் அரசனை அணுகி சொப்பனச் செய்தியை அறிகிறான். நண்பனுடைய நல்ல உபதேசங்களால் ஒருவாறு மனத்தைத் தேற்றிக் கொண்டு கானகத்தில் தவம் புரிந்து வரும் மகாராணியை அழைத்துவர விதூஷகனை அனுப்புகிறான் அரசன்.

**இ**டம் : சொர்க்கலோகம். நாரத பகவான், பானுமாலிமுனிவர் இருவரும் ஆசனத்தில் அமர்ந்து உல்லாசமாய் பேசிக்கொண்டு இருக்கிறார்கள். சூரியபகவானின் புதல்வி தபதி என்பவளை விளையாட்டாகத் தனது மடியில் எடுத்து அமர்த்திக் கொள்ளுகிறார் நாரதர். அவளை சீராட்டிக் கொண்டே பானுமாலியைப் பார்த்து, ''இவளுக்குத் தகுந்த வரன் எங்கு கிடைக்கப் போகிறான்?'' எனக் கேட்கிறார் நாரதர். ''அஸ்தினாபுரத் தலைவனான ஸம்வரணன் என்பவனே எல்லாவிதத்திலும் இவளை அடையத்தகுதி உள்ளவன்'' என உரைக்கிறார் பானுமாலி முனிவர். ஸம்வரணன் என்ற பெயர் சொன்னவுடன் தபதிக்கு மனத்தில் ஒரு அலாதியான ஆனந்தம் பிறந்தது. இவள் அவ்வரசனை இதுவரையில் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. ஆயினும் அவனிடம் அன்பு கொண்டாள் என்றால் காரணம் என்ன தெரியுமா? விதிதான்! விதி இருவரையும் சேர்த்து வைக்க விரும்பினால் அதற்குத் தக்கவாறு ஒருவரையொருவர் பார்க்காமலேயே அவர்களுடைய மதியும் விதிக்கு ஒத்தவாறு ஒன்று சேரும். இதுதான் விதியின் விளையாட்டு! ரம்பை மேனகை முதலிய தோழிமார்களுடன் தன் மனத்துக்குள் மணவாளனைப் நினைத்த

ஸம்வரண மகாராஜாவைக் காண விமானம் ஏறி வான வழி யாக அஸ்தினாபுரம் வருகிறாள் தபதி. கங்கைக் கரையின் அழகு இவள் கண்களைக் கவர்கிறது. நகர சோலை, இயற்கை அழகு இவைகளைக் கண்டு உள்ளம் பூரித்த தபதி, பூலோக வாழ்க்கையே சிறந்ததெனச் சிந்தித்தாள். அஸ்தினாபுரத்தை அடுத்தாற்போல் ஒரு சுப்பிரமணிய சுவாமிக் கோயில் இருந்தது. அதைச் சுற்றிச் செழிப்பான நந்தவனம். பூலோக அழகைப் பார்த்துக் கொண்டே இங்கு வருகிறாள். விமானம் வானத்திலேயே நிற்கிறது. நந்தவன சோலையில் ஈடுபட்டுத் தோழிமாருடன் சற்று விளையாடுகிறாள் தபதி.

புத்திர பாக்கியம் பெறாத குறையால் நகர வாழ்க்கையை வெறுத்து மாலை விதூஷகனுடன் நந்த வனம் வருகிறான் அரசன். அரச தரிசனமும் தபதிக்குக் கிடைத்தது. கண்டு களித்தாள். அவன் பெயரைக் கேட்டவுடனே ஆசை கொண்ட தபதியின் மனம், அவனை நேரில் கண்ட பிறகு எந்நிலையை அடைந்திருக்கும் என்பதை எண்ணிப் பார்த்தால் போதும். அரசன் தன்னை நேரில் காணாதவாறு ''திரஸ்கரிணி'' என்ற மந்திர பலத்தால் அவன்முன் இருந்தும், அவனுடைய கண்ணுக்கு அகப் படாமலேயே நடப்பதை எல்லாம் பார்த்துக் கொண்டிருக் கிறாள் சூரிய குமாரி தபதி. என்றுமிராததோர் நறுமணம் அங்கு அன்று வீசுகிறது. அதற்குத் தக்கபடி தபதியும், மேனகையும் நந்தவனத்தில் நடந்து சென்றதால் பெண் மணிகளின் இரட்டைக் காலடிகள் மணலில் ஒருபுறம் பதிந்து கிடந்தன. அடுத்தாற்போல் சிவப்பு வர்ணம் பூசிய கால்களால் கற்கள் மீது நடந்து சென்றதால் சிவந்த காலடிகள் கற்களில் காணப்பட்டன. இக் குறிகளால் ''தேவலோகத்திலிருந்து தேவகன்னிகைகள் இங்கு வந்து விளையாடிச் சென்றிருக்கவேண்டும்; இல்லையேல் இவ் வடையாளங்கள் காணக் காரணம் யாது'' என்று கருது

கிறான் அரசன். பெண்மணிகளின் அடிச்சுவடுகளைக் கண்ட அரசன் தேவகன்னிகைகளையே நேரில் கண்டது போல் எண்ணி மகிழ்ந்தான். அழகிய பெண்களை, அதிலும் தேவகன்னிகைகளை நேரில் பார்த்துத்தான் ஆனந்தம் அடையவேண்டுமா? அவர்கள் விட்டுச் சென்ற அடையாளங்களே அகமகிழச் செய்யப் போதியவைகளாகும். காதலியின் அடையாளங்கள் காதலனைக் கவருவதாகக் கூறுவது காவியத்தின் சிறப்பு. மந்திர பலத்தால் ஆகாயத்தில் மறைந்து எல்லாவற்றையும் கண் கூடாகக் கண்டாள் தபதி. தோழி மேனகை தான் காதில் அணிந்திருந்த பனைஓலையால் செய்யப்பட்ட காதோலையை எடுத்து, அதில் ஊர் பெயர் ஒன்றுமில்லாமல் அரசனை ஒரு பெண் காதலிக்கிறாள் என்னும் சுலோகத்தை எழுதி அதை அரசன் முன்னிலையில் போடுகிறாள். காதலனுக்குக் கடிதம் கிட்டுகிறது. விஷயமும் புரிந்தது. தன்னைக் காதலிக்கும் பெண்ணின் பெயர் மாத்திரம் புரியவில்லை. நடந்த சம்பவத்தை யொட்டி இதை எழுதியவள் தேவகன்னிகையாக இருக்கவேண்டும் என எண்ணுகிறான். நடந்ததையெல்லாம் அருகிலுள்ள மரத்தடியில் மறைந்து பார்த்துக் கொண்டிருந்த மகாராணிக்கு மட்டில்லாத மனக் கோபத்தை மூட்டியது. திடீரென அரசன் முன்வந்து, அவனைக் கடிந்து பேசிக் கோபமாக வீடு திரும்புகிறாள் மகாராணி சுமதி.

## 2

இடம்: சுவர்க்கலோகம். அங்கு ஒரு பூந்தோட்டம். மரத்தடியில் சூரியகுமாரி தபதி உட்கார்ந்திருக்கிறாள். ரம்பை, மேனகை இருவரும் இருபுறமும் நின்று கொண்டிருக்கிறார்கள். அவள் முகம் வாடியிருக்கிறது. காரணம் வேறென்ன இருக்கப் போகிறது!

ஸம்வரணனைக் கண்ட காதலால் ஏற்பட்ட கலக்கத்தால் இந்நிலையை அடைந்தாள் என்பதை வாய்விட்டுச் சொல்லவா வேண்டும்? அவளுடைய சிந்தை அதிகரிக்கிறது. சிந்தனையும் வேகமாக ஓடுகிறது. காதல் நோயிலிருந்து தப்பி வாழ வழியை மாத்திரம் வகுத்துக் கொள்ள முடிய வில்லை. மறுபடியும் பூலோகம் சென்று அவனைக் கண்டு உயிர் தரிக்க எண்ணினாள் தபதி. இமயமலையைச் சுற்றி பெரிய காடு. சூரிய பகவான் (தபனன்) பரமனைக் குறித்து தவம் செய்து உலகமனைத்தையும் பிரகாசிக்கும் படியான சக்தியை இங்கிருந்து பெற்றதினால் இவ் வனத்திற்கு அன்று முதல் தபனவனம் எனப் பெயர் பிரசித்தமாயிற்று. அங்கு புனிதமான புஷ்கரணி ஒன்று உண்டு. திரிவிக்கிரம பகவானுக்குப் பலிசக்கரவர்த்தி தனது ராஜ்யமனைத்தையும் தானம் செய்யும்போது சுத்தமான ஜலம் கையிலிருந்து இங்குக் கீழே வீழ்ந்து புஷ்கரணியாக மாறியதால் இதைக் ''கரதலோதக புஷ்கரணி'' என்ற பெயருடன் அனைவரும் குறிப்பிட்டு வருகிறார்கள். கரையிலே அதற்குச் சான்றாகக் கல்யாணவாமனனுடைய தேவாலயம் ஒன்று இருப்பதைக் காணலாம். இங்கு பரமன் வாமன ரூபத்துடன் காட்சியளிக் கிறான். இரத்தினக் கற்களால் இழைத்த மணி மண்டபம் இக்கோயிலுக்குப் பெரும் சோபையைத் தருகிறது. விரகத் தால் தோழிகளை விட்டுத் தனியாக இருந்து காலம் கழிக்க எண்ணி இக்கோயிலுக்கு வருகிறாள் தபதி.

நந்தவனத்தில் தேவகன்னிகைகளின் காலடிகளைக் கண்டது முதல் அக்கன்னிகையரிடம் காதல் கொண்டு, அதனால் ராஜ்ய பரிபாலனத்தையும் மறந்து, உற்சாகமற்று இருக்கிறான் அரசன். தோட்டத்தில் கிடைத்த செய்தி யோலை அரசனின் விரகதாபத்தை அகற்றச் சற்று ஆதார மாக இருந்தது. காதலிகளிடமிருந்து கிடைத்த பொருள்களைக் கண்டு காதலர்கள் சற்று ஆறுதலடைவது இயற்கையல்லவா? ஒரு நாள் காலை மனக்கவலையை மறக்க

விதூஷகனுடன் நகரத்துக்கு அருகிலுள்ள கானகத்துக்கு வேட்டையாட வருகிறான் அரசன். நூறு பிள்ளைகளுடன் வெகுநாட்களாக அங்கு வசித்து வந்த மோகினி என்ற அரக்கி அரசனை அழிக்க ஆவேசமாக வருகிறாள். அரக்கியை மட்டும் இரக்கத்தால் கொல்லாமல் விட்டு விட்டு அவளுடைய நூறு பிள்ளைகளை அழித்து விடுகிறான் அரசன். புத்திர சோகத்தினால் இக்கானகத்தை விட்டு வேறிடம் செல்கிறாள் அரக்கி. அரசனுக்கும் அரக்கிக்கும் நடந்த யுத்தத்தைக் கண்டு பயந்த விதூஷகன் வெகு தூரம் சென்று நண்பன் இருக்கும் இடம் தெரியாமல் கானக மெல்லாம் தேடியலைகிறான். கடைசியாகத் தபனவனத்தில் பிருகுமகரிஷி ஆசிரமத்தின் அருகில் வந்து முனிவரை வணங்குகிறான் விதூஷகன். அங்குள்ள தேவாலயம், புஷ்க கரணி ஆகியவற்றின் வரலாற்றை விதூஷகனுக்கு உணர்த்து கிறார் முனிவர். அவற்றைப் பார்த்தவுடன் நண்பனான அரசனுடைய நினைவு வருகிறது. ''இப்படிப்பட்ட அழகான இடத்தில் என் நண்பன் சிறிது காலம் இருந்தால் இயற்கை அழகின் ஆற்றலால் அவனுடைய மனம் நிம்மதி யடையும்'' என்று விதூஷகனுக்கு எண்ணம் உண்டாயிற்று. ஓர் நல்ல இன்பமோ, இடமோ ஒருவனுக்குக் கிடைத்தால் தன் நண்பனும் கூடித் தன்னுடன் அதை அனுபவிக்க வேண்டும் என்று நினைப்பது உண்மை நண்பர்களின் இயற்கைக் குணமாகும். நந்தவனத்தில் கிடைத்த செய்தி ஓலையை ஓர் தடி நுனியில் கட்டி தோளில் சார்த்திக்கொண்டு தோழனை எங்கும் தேடிக் கானக வழியே செல்லுகிறான் விதூஷகன். ரம்பை குரங்கு வேஷத்தோடு கானகத்தில் சென்று கொண்டிருக்கும் விதூஷகனைக் கிட்டி அச்செய்தி யோலையை அபகரித்துத் தபதியிடம் சென்று அதனைக் கொடுத்து அவளை ஆறுதலடையச் செய்கிறாள். ஓலையைப் பறிகொடுத்த விதூஷகன் எங்கும் அலைந்து கடைசியில் நண்பனைத் தரிசிக்கிறான். நடந்தவற்றைக் கூறி ஓலையைப் பறிகொடுத்த படலத்தையும், குளிர்ந்த அக் குளக்கரைக் காட்சியையும் சொல்லி, அனங்கனின் ஆபத்தில் அகப்படா

மலிருக்க நண்பனை அங்கு அழைத்து வருகிறான். மணி மண்டபத்தில் விசாரமுற்றுத் தபதி உட்கார்ந்திருக்கிறாள். நண்பனுடன் அரசன் அங்கு வந்து அவளைக் கண்டு யாரென ஐயம் கொள்கிறான். அன்று தனக்குச் செய்தியோலை அனுப்பிய மாது இவள்தான் என்று அரசன் அறிய முடிய வில்லை. மனம் மாத்திரம் ஏதோ சற்று மயங்குகிறது. இப்படி விசாரமுற்றிருக்கும் பெண்மணியின் விஷயத்தை அறிய ஆவல் கொண்டு மறைவிடத்தில் விதூஷகனுடன் மறைந்து இருந்து வருகிறான். விரக வேதனையால் பலவாறு புலம்பி நிம்மதியடைய வழியின்றி உதவியாளரின்றி உயிரை இழக்கச் சித்தமாகிறாள் தபதி. அதுவரை ஆகாயத்தில் மறைந்து நடப்பதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த ரம்பை, மேனகை இருவரும் அவள்முன் தோன்றி அம் முயற்சியிலிருந்து தடுக்கிறார்கள். தபதி தோழிகளுடன் கலந்து கலகலவெனப் பேசும் பொழுதுதான் இவளுடைய இதயத்தில் இடம் பெற்ற இளவரசன் ஸம்வரணன் தான் என்று சந்தேகமில்லாது வெளியாயிற்று. மறைந்திருந்த அரசனுக்கு உண்மை தெரியலாயிற்று. தனக்குக் காதல் சீட்டைக் கானகத்தில் போட்ட காதலியும் இக்கன்னிகை யாகத்தான் இருக்க வேண்டுமென அரசன் அறியவில்லை. யாரோ ஒரு அரசகுமாரி தன்னை அடைய விரும்புகின்றாள் என்பது அரசன் அறிந்த உண்மை. அதற்குள் மாலை நேரமாகி விட்டது. பிருகுமகரிஷியின் ஆசிரமத்தை அடைகிறான் அரசன்.

## 3

**இடம் :** தேவாலயம்; காலம் : காலை வேளை. தபதி தன்னைக் காதலிக்கிறாள் என்பதைக் கண்டது முதல் அரசனுடைய மனமும் நிம்மதியில்லாமலே இருந்து வந்தது. விரக வேதனையின் காரணமாக மனதிலும் உடலிலும்

மாறுதலை எங்கும் காண்பது போல் இவனிடத்திலும் காணப்பட்டது. உள்ளத்திலுள்ள கருத்தை எவ்வளவு மறைத்து வைத்திருந்தும் அதை உடல்மாறுதலின் உதவியால் சுலபமாக உணர்ந்துவிடலாம். அதிலும் முகம் உள்ளத்தை உள்ளபடிக் காட்டுவதில் நிலைக் கண்ணாடியை ஒத்ததாகும். கவிகளும் முகத்தை உள்ளத்தின் கண்ணாடி எனக் கூறியிருக்கிறார்களன்றோ? மனிதனுடைய கஷ்ட சுகங்களை வாய்விட்டுச் சொல்லாமலே முக பாவனையால் உணரலாம். சுந்தரியிடம் கொண்ட மோகத்தால் சுய நினைவை இழக்கிறான் ஸம்வரணன். அருகிலிருந்த விதூஷகன் தாமரையிலை, தாமரைத்தண்டு ஆகியவைகளைக் கொணர்ந்து நண்பனுக்கு வைத்தியோபசாரம் செய்கிறான். சுயநினைவு பெறுகிறான் அரசன். காதலி அனுப்பிய காதல் செய்திகூறும் காதலோலையைக் கேட்கிறான் அரசன். எதற்கு? அதைக் கண்டாவது ஆறுதல் அடையலாம் என்ற ஆர்வத்தினால். செய்தியோலை பறிபோன செய்தி தெரிகிறது. இவையெல்லாவற்றையும் ''திரஸ்கரணி'' என்ற மாயவித்தையால் ஆகாயத்தில் மறைந்து தோழிகளுடன் பார்த்து வருகிறாள் தபதி. செய்தியோலையைக் கண்டாவது அரசன் ஆனந்தம் அடையட்டும் என்று ஆர்வம் கொண்ட ஆருயிர்த் தோழி ரம்பை அதனை அரசன் முன் எறிகிறாள். அதைக்கண்டு திடுக்கிடுகிறான் அரசன். மேன்மேலும் அரசனுடைய துயரம் அதிகரித்துக்கொண்டே வருகிறது. அதைப் போக்க விதூஷகனுக்கு உபாயம் ஒன்றும் தோன்றவில்லை. ''நண்பனின் நிலையை மாற்ற சக்தியற்ற நான் உயிருடன் இருந்துதான் என்ன பயன்?'' என்ற முடிவோடு உயிர்விடத் துணிகிறான் விதூஷகன். ''தற்கொலை செய்து கொண்டால் மாத்திரம் நினைத்த காரியம் நிறைவேறிவிடுமா?'' என்ற வேதாந்தம் சமயத்தில் யாருக்கும் பயன்படுவதில்லை. இருந்தாலும் இறந்தாலும் நிலை ஒன்றுதான். இறந்தால் கவலை தெரியாது. இருந்தால் அது தெரியும். காரியம் கைகூடாதெனினும் கவலையில்லாமல் இருக்கவே தற்கொலை உபாயத்தை எல்லோரும் மிகுதியாகக்

கையாளுகின்றனர். திடீரெனத் தபதி தோழிகளுடன் அரசன்முன் தோன்றி இனிய கரங்களால் அவனை மெல்லத் தொட்டு புத்துயிர் ஊட்டுகிறாள் அரசனுக்கு. அப்பொழுதும் இவளை யாரென அரசன் உணரவில்லை. சமீபத்திலிருந்த ரம்பை, ''இவள்தான் சூரியன் மகள் தபதி என்பாள். அன்று நந்தவனத்தில் காதல் ஓலையைத் தங்களுக்கு அனுப்பியிருக்கிறாள். சில நாட்கள் வரை இவளுடைய தந்தையான சூரியனை நீங்கள் வழிபட்டால் இவளை மனைவியாகப் பெறலாம்'' எனப்பேசுகிறாள். அரசனுக்கு விஷயங்களெல்லாம் விவரமாகப் புரிந்தன. திரும்பிப் பார்க்கிறான். விதூஷகனைக் காணவில்லை. தற்கொலை முயற்சியோடு விதூஷகன் தனியே சென்றதாகக் கூறுகிறாள் ரம்பை. நண்பனைக் காக்க அங்கிருந்து விரைகிறான் அரசன்.

# 4

இடம்: தபனவனம். குகையினுள் உட்கார்ந்து தபதியை அடைய சூரியனைக் குறித்து தவத்தைத் தீவிரமாக இயற்றி வருகிறான் ஸம்வரணன். காலம் வேமாகச் செல்லுகிறது. சூரியபகவான் இவனுக்கு முன் தோன்றித் தனது மகள் தபதியை மணம் செய்து வைக்கச் சம்மதித்தான். மணமும் முடிந்து விட்டது. தபதியுடன் அக்காட்டிலேயே காலம் கழித்து வருகிறான் அரசன். அவ்விருவர்க்கும் ஓர் ஆண்குழந்தை பிறக்கிறது. ஆனால் தேவமாயையால் தாய்க்குக் குழந்தை பிறந்த செய்தி தெரியவில்லை. ஒருவருக்கும் தெரியாமல் சிசுவை மாயமாகத் தன்னிடம் எடுத்துச் செல்லுகிறான் சூரியன். தம்பதிகள் இருவருமே இச்செய்தியைத் தெரிந்து கொள்ளவில்லை. தேவமாயையை அறிய எவரால்தான் முடியும்? இப்படியே வெகு நாட்கள் கழிந்தன. கன்னிப் பெண்ணாக இருக்கும்போது,

''தன்னை ஸம்வரணனுடன் சேர்த்து வைத்தால் ரதி தேவிக்குப் பூஜை செய்கிறேன்'' என்று தான் வேண்டிக் கொண்ட விரதத்தை நிறைவேற்றி வரத் தோழிகளுடன் தேவாலயம் சேருகிருள் தபதி. அரசன், விதூஷகன் இருவரும் ஓர் மரத்தடியில் உட்கார்ந்திருக்கிருர்கள். புத்திர சோகம் கொண்ட மோகினி என்ற அரக்கி ''அரசனை ஏமாற்ற இதுவே தகுந்த சமயம்'' என்று எண்ணி, அரசனிடம் வந்து, ''கந்தர்வராஜனுக்கு கனகலதா என்ற பெண் இருக்கிருள். அவள் மிக்க அழகு வாய்ந்தவள். முன்னொரு நாள் காதல் ஓலையையும் உங்களுக்கு அனுப்பியிருக்கிருள். உங்கள் சம்பந்தம் கிடைக்காத வருத்தத்தால் உயிர் துறக்கப் போகிருள். அவளை நீங்கள் எப்படியும் கருணைகொண்டு காப்பாற்ற வேண்டும்'' என்று கபட எண்ணத்தோடு பேசி ஏமாற்றப் பார்க்கிருள். கபடம் அறியாத அரசன், பெண் பாவத்திற்கு அஞ்சி சரி எனப் பணிகிருன். ''கனகலதாவை அழைத்து வருவதாகச் சொல்லி படைகளைத் திரட்டி வந்து இவனை ஒழித்துக் கட்டவேண்டும்'' என்பது மோகினியின் கபட எண்ணமாகும். பிருகுமுனிவரின் பிரபாவத்தால் மோகினியின் முயற்சிகள் யாவும் வீணுயின. இந் நாடகத்தை மறைந்து பார்த்துக் கொண்டிருந்த தபதி, அரசன் மற்றொருத்தியைக் காதலிக்கிருன் என்று தப் பெண்ணம் கொள்கிருள். அரசன் உண்மையைக் கூற, பிறகு தபதி சமாதானம் பெறுகிருள்.

# 5

அரசன் நாட்டை விட்டு ஒரு வருடமாகிறது. தபதியின் மோகவலையில் சிக்கி, உலகையே மறந்திருக்கிருன் அவன். அஸ்திஞபுரத்தில் ராஜ்யம் சரிவர நடக்காததால் தர்மங்களெல்லாம் குறைந்து மழை பெய்யவில்லை. நாட்டில் பஞ்சம் அதிகமாகி விட்டது. மக்களின் துயரம்

கட்டுக்கடங்கவில்லை. அந்நாட்டு மந்திரி வசுமித்திரன் பஞ்சத்தைப் போக்கி பிரஜைகளைக் காக்கப் பட்டபாடும் பயனளிக்கவில்லை. அரசனிடம் சென்று கூறுவோமென்றால் அவன் இருப்பிடம் தெரியவில்லை. நாடு படுமோசமான நிலையில் இருப்பதைப் பார்க்கிறான் சூரியபகவான். தபதியை அரசனிடமிருந்து பிரித்து, அவனுடைய கவனத்தை நாட்டு மக்களின் நலத்தின் மீது திருப்பி நாட்டை நாசத்திலிருந்து மீட்கவேண்டும் என்று கருதிய சூரியபகவான் தனது மகள் தபதியை யாருக்கும் தெரியமால் தன்னிடம் எடுத்து வரும் படி மாதலி என்ற சாரதிக்குக் கட்டளையிடுகிறான். அவன் அதன்படியே செய்கிறான். ஒரு வருடகாலம் ஸம்வரண னிடம் சம்பந்தம் வைத்துக்கொள்ளக் கூடாது என்று தபதிக்குச் சூரியபகவான் கட்டளையிடுகிறான். தன் மக்களின் நலனை விடப் பொதுமக்களின் நலனைப் பெரிதாக மதிப்பது உத்தமர்களின் உயர்ந்த குணமல்லவா? சுயநலம் பெரிதா? பொது நலம் பெரிதா? நித்திரையை விட்டு எழுந்து அரசன் பார்த்த பொழுது தபதியைக் காணவில்லை. மனம் திடுக் கிட்டு ஒரு மலைச்சாரலில் உட்கார்ந்திருந்து வருந்துகிறான். விதூஷகன் கானகம்முழுதும் தேடியும் நண்பனைக் காணவில்லை. நாளுக்குநாள் பஞ்சம் அதிகரிக்கிறது. அரசன் போன இடமும் புரியவில்லை. பாஞ்சால தேசத்து அரசன் நம்மீது படையெடுத்து வருகிறான் என்று பொய் சொல்லி, அரசனை இங்கு அழைத்து வரவேண்டும். அப் பொழுதுதான் நாடு செழிப்புற்றிருக்கும் என்று கருதி தற்செயலாகத் தபனவனம் வருகிறான் மந்திரி வசுமித்திரன். நடுக்காட்டில் மந்திரியும் விதூஷகனும் சந்தித்துக் கொள் கிறார்கள். இருவரும் ஒன்றுகூடி அரசனைத் தேடும்படலம் தீவிரமாகிறது. அரசனைச் சந்தித்து பாஞ்சால அரசனிட மிருந்து நாட்டுக்குக் கேடு வந்திருப்பதாக அவனிடம் கூறு கிறான் வசுமித்திரன். தேசாபிமானத்தால் தபதியை மறந்து, அஸ்தினுபுரம் வருகிறான் அரசன். நல்ல காரி ய்ங்கள் நாளுக்குநாள் அதிரிக்க, பஞ்சம் நீங்கி நாடு

சுபிட்சமடைகிறது. வசுமதி செய்த தந்திரத்தை யுணர்ந்து மெச்சிக் கொள்கிருன் அரசன்.

## 6

**இடம் :** அரண்மனையின் மேல்மாடி. **காலம் :** இரவு. அரசன் விதூஷகனுடன் உட்கார்ந்து தபதியை நினைத்தவாறு ஏதோ விசாரமுற்று இருக்கிருன். தன்னைப் பிரிந்த அரசனுடைய மனத்தைச் சோதிக்க எண்ணிய வளாய்த் தந்தைக்குத் தெரியாமல் மேனகை உருவத்தோடு இங்கு வருகிருள் தபதி. வேஷத்தை உணராத அரசன் மேனகை இங்கு வரக் காரணம் யாது எனக் கேட்கிருன். தான் தபதியினுல் அனுப்பப்பட்டு அரசனுடைய நிலையை அறிந்துபோக வந்திருப்பதாகக் கூறி விடைபெற்று விண் ணுலகம் செல்கிருள் போலி மேனகை. அரசனை அழிக்கச் சமயம் பார்த்திருந்த ராட்சஸிக்குச் சட்டென்று ஒரு சதித் திட்டம் தோன்றிற்று. ரம்பை வேஷத்துடன் தபதியிடம் வந்து விரகதாபத்தால் அரசன் கங்கையில் வீழ்ந்து விட்ட தாகச் சொல்லி ஏமாற்றிவிடுகிருள். இதை நம்பிக் காதலனை எங்கும் பிரியாமலிருக்க அதே கங்கையில் விழுகிருள் தபதி. அங்கிருந்து உடனே மாய ரம்பை அரச னிடம் வந்து, ''உன் பிரிவினுல் தபதி கங்கையில் விழுந்து விட்டாள்'' எனச் சொல்ல, அரசன் ஏமாற்றமடைகிருன். ராட்சஸ மாயையை உணராத அரசன் தன் முடிவை நாடி கங்கைக்கரைக்கு வருகிருன். தெய்வாதீனமாக உயிர் தப்பிய தபதி, அரசன் இருக்கும் கரையோரமாக அடித்துக் கொண்டு வரப்படுகிருள். அரசன் உதவியால் தபதி கரையை அடைகிருள். ரம்பையின் பேச்சை நம்பி இவ்வாறு செய்யத் துணிந்ததாக இருவரும் சொல்லிக் கொள்கின்றனர். தோழி ரம்பையை அழைத்து உண்மையைக் கேட்க, ''எனக்கு ஒன்றும் தெரியாது'' என பதில் வருகிறது. இது

ராட்சஸியின் மாய வேலையென எல்லோரும் உணர்கின்றனர். அரசனுக்குத் தெரியாமலே சொர்க்க லோகத்தில் வளர்ந்து வரும் தபதியின் புதல்வன் குரு என்பவன் தனது தகப்பனுக்குத் தீங்கிழைத்த ராட்சஸியை மாய்த்து அவள் சவத்தை இழுத்துக் கொண்டு தாய் தந்தையரிடம் வருகிறான். வசிஷ்டமுனிவர் குருவைப் பின்தொடர்கிறார். குருவைத் தனது மகன் என நம்பாத அரசனிடம் குரு பிறந்த வரலாற்றையும், அவன் இதுவரை சொர்க்கலோகத்தில் வசித்து வந்த உண்மையையும் வசிஷ்ட முனிவர் அரசனிடம் கூறிச் செல்கிறார். சூரியபகவான் தபதியைத் தெரிந்து கொள்ளாமல் அழைத்துச்சென்ற காரணத்தை அரசனிடம் சொல்லித் தம்பதிகளை ஆசீர்வதிக்கிறார். □□

# அவிமாரகம்

குருதேசத்தில் வைரந்தியம் என்றொரு நகரமுண்டு. குந்திபோஜன் என்ற அரசன் அதை ஆண்டு வந்தான். அவனுக்கு சுசேதனை, சுதர்சனை என்ற இரு சகோதரிகள் இருந்தனர். மூத்த சகோதரி சுசேதனையை சவ்வீர ராஜனும், சுதர்சனையைக் காசிராஜனும் முறையே மணந்து கொண்டு, இல்லறம் இனிது நடத்தி வந்தனர். பல வருஷங் கள் கழிந்தும் பிள்ளையில்லாத சுசேதனைவுக்கு ஒருசமயம் மிக்க அழகான ஓர் ஆண்குழந்தை பிறந்து அது உடனே இறந்து விடுகிறது. இதையறிந்த சுதர்சனை என்பவள் சகோதரியிடம் மனமிரங்கித் தனக்கு அக்கினிபகவானின் அருளால் பிறந்த ஆண்குழந்தையை அவளிடம் இரகசிய மாக எடுத்துச் சென்று, ''இக்குழந்தையை நீ பெற்றுக் கொண்டு இதை உன் பிள்ளையைப்போல் வளர்த்து வரு வாய். இச்செய்தி நம்மிருவர் தவிர வேறு யாருக்கும்

தெரியக் கூடாது'' என்று சொல்லிக் குழந்தையைக் கொடுத்துவிட்டு வருகிருள். சவ்வீரராஜன் தனக்குக் குழந்தை பிறந்த செய்தியைக் கேட்டு உள்ளம் பூரித்து, விஷ்ணுசேனன் என்ற பெயர் சூட்டி, அதை அன்போடு வளர்த்து வருகிருன். அரசன் முதலிய அனைவரும் நடந்த ரகசியம் ஒன்றும் தெரியாமல் விஷ்ணுசேனனை சுசேதனு ஈன்றெடுத்த மகனுகவே நினைத்து வருகிருர்கள். சில நாட்கள் செல்ல சுதர்சனு ஜயவர்மன் என்ெருரு மகனைப் பெற்று வளர்த்துவருகிருள். விஷ்ணுசேனனுக்கு ஐந்தாவது வயது நடக்கிறது. ஒருநாள் அவன் தோழர் களுடன் தெருவில் விளையாடிக் கொண்டிருக்கிருன். ஆடு உருவம் கொண்ட தூமகேது என்ெருரு அரக்கன் சவ்வீர நாட்டு மக்களைப் பன்முறை துன்புறுத்தி வந்தான். இதில் இருந்து தப்ப ஒருவழியும் அவர்களுக்குத் தோன்றவில்லை. வழக்கம்போல் தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும் விஷ்ணுசேனனைக் கொல்ல அவனருகே அஞ்சாமல் வருகிருன் அரக்கன். ஐந்து வயது பாலகனுகிய விஷ்ணுசேனன் ஓர் நொடியில் அருகே வந்த அவ்வரக்கனை ஒழித்துக் கட்டு கிருன். இச் செய்தி அந் நாட்டிலுள்ள அனைவருக்கும் பெரும் வியப்பையளித்தது. விஷ்ணுசேனனை அவர்கள் ஓர் அவதார புருஷன் என்று எண்ணிஞர்களென்ருல் இதில் என்ன வியப் பிருக்கிறது! 'அவி' என்ருல் ஆடு என்று பொருள். ஆடு உருவத்துடன் வந்த அரக்கனை மாய்த்த காரணத்தால் விஷ்ணுசேனன் அது முதல் அவிமாரகன் என்ற பெயரோடு புகழ்பெற்று விளங்கிஞன்.

அவிமாரகனின் தாய்மாமனுன குந்திபோஜனுக்குக் குரங்கி என்ெருரு பெண் பிறந்து வளர்ந்துகொண்டு வரு கிருள். நற்பருவமடைந்த அந் நங்கை அழகில் ரதிதேவியை ஒத்திருந்தாள். அழகிலும் குணத்திலும் இவளுக்குத் தகுந்த வரன் எங்கு கிடைக்கப்போகிருன் என்ற விசாரத்தில் அரசன் மூழ்கிவிட்டான். இவளை மணந்துகொள்ள பல

நாட்டு மன்னர்கள் அரசனிடம் வந்து, தோல்வியோடு திரும்பலாயினர். இவளுக்கு எவ்விதத்திலும் இவ்வரச குமாரர்கள் தகுதியற்றவர்கள் என்ற அரசனின் இறுதியான முடிவே இதற்குக் காரணமாகும். மிக்க வலிமை வாய்ந்த தனது மருமகனை அவிமாரகனே முடிவில் தன் மாப்பிள்ளை யாக வரத் தகுதியுடையவன் என்று தனக்குள்ளே முடிவு செய்து கொண்டான். சவ்வீரராஜன், காசிராஜன் இவ்விரு வரும் தங்கள் தங்கள் பிள்ளைகளுக்குக் குரங்கியைக் கொடுக்குமாறு தூதர்கள் மூலம் செய்தி அனுப்பினர். அவர்களுக்கு ஏதோ காரணம் சொல்லி மகளின் திருமணத் தைத் தள்ளிப் போட்டு விடுகிறான் அரசன்.

வழக்கம்போல் ஒரு நாள் வேட்டையாடக் கானகம் செல்கிறான் சவ்வீரராஜன். சண்ட பார்க்கவர் என்றொரு முனிவர் தனது சீடனுடன் அக் கானகத்தின் வழியே வந்து கொண்டிருக்கிறார். புதரைப் புகலடைந்த புலிகள் அரசனின் அம்புகளுக்கு அஞ்சி, அங்குமிங்கும் அலைந்து அவ் வழியே வந்துகொண்டிருக்கும் முனிவரின் சீடனைக் கொன்று விடுகின்றன. வேட்டையை முடித்துக்கொண்டு வரும் அரசனுக்கு இக் காட்சி கடும்கலக்கத்தை உண்டாக்கி விட்டது. ஞானதிருஷ்டியால் தனது சீடனின் முடிவுக்கு இவ்வரசனே காரணம் என்று கண்டுகொண்டு முனிவர், ''நீ குடும்பத்துடன் சண்டாளனாகக் கடவாய்'' என்று அரசனைச் சபித்து விடுகிறார். சாபத்தைக் கண்டு நடுங்கிய அரசன், முனிவரின் கால்களில் வீழ்ந்து மன்னிக்க வேண்டு கிறான். ''நீ ஓராண்டு குடும்பத்துடன் அஞ்ஞாதவாசம் செய்து இச் சாபத்தைத் தீர்த்துக்கொள்'' என்று முனிவர் சாபத்திற்கு மாற்றுக் கூறிச் செல்கிறார். சவ்வீரராஜன் அவி மாரகன் முதலியோர்களுடைய உருவத்தில் மாறுதல் அதிகம் இல்லை. எனினும் பார்ப்பவர்களுக்கு இவர்களுடைய முக ஜாடை புரிந்துகொள்ளாத வண்ணம் மாறிவிட்டது. அரசன் சாபத்தைக் கழித்துக் கொள்ள நகரிலேயே ஒரு

வரும் அறியாவண்ணம் அஞ்ஞாதவாசம் செய்து வருகிறுன். அவிமாரகன் மாத்திரம் அருகிலுள்ள ஒரு காட்டில் நண்பஞன விதூஷகனுடன் ஒருவருக்கும் தெரியாமல் காலம் கழித்து வந்தான்.

# 2

வசந்த காலம் நேரம். மாலே. நந்தவனத்தில் உல்லாசமாக விளேயாட எண்ணம் கொண்டாள் குரங்கி. கௌஞ்சாயனன், பூதிகன் என்ற மந்திரிகளே உதவியாகக் கொண்டு குரங்கி நந்தவனத்தை அடைகிறுள். இயற்கையின் அழகு இதயத்தை இழுக்கிறது. ஓர் ஓடைக்கரையில் அமர்ந்து இயற்கையழகையும் வசந்தகால சோபையையும் கண்டுகளித்துப் பூரிக்கிறுள் குரங்கி. அங்கு ஒரு காட்டு யானே திடீரென வருகிறது. அதைக் கண்ட குரங்கியின் உள்ளம் அச்சம் கொள்கிறது. மந்திரிகளால் யானேயை அடக்க முடியவில்லே. அங்கு அஞ்ஞாதவாசம் செய்து வந்த அவிமாரகன் அப்பொழுது வந்து அந்த யானேயை ஓர் நொடியில் வீழ்த்துகிறுன். பேராபத்திலிருந்து தன்னேக் காப்பாற்றிய அவ் வீர வாலிபனேச் சவ்வீரராஜனின் மகன் என்று அவள் உணரவில்லே. இவளேத் தனது மாமன் மகள் குரங்கி என்று அவிமாரகன் மாத்திரம் உணர்ந்து கொண்டான். சாப பயத்தால் தன்னே யாரென அவளிடம் சொல்லிக் கொள்ளாமல் சென்றுவிடுகிறுன். அன்று முதல் குரங்கிக்கு அவிமாரகனிடம் அன்பு அதிகரித்தது. அவிமாரகனின் மனேநிலேயும் அதற்கு ஒத்தவாறு அவளிடம் ஒன்று பட்டிருந்தது. அவனே நினேத்துக்கொண்டே குரங்கி வீடு திரும்புகிறுள். காட்டில் நடந்த இவ் வீரச் சம்பவத்தை அமைச்சன் கௌஞ்சாயனன் மூலம் தெளிவாக உணர்ந்து அவ் வீர வாலிபனே அறிய ஆவல் கொண்டான் அரசன். அத் தோட்டத்தில் கொஞ்ச நேரம் தனித்திருந்த

அமைச்சன் பூதிகன் அவ்வாலிபனை யாரெனப் பன்முறைக் கேட்டும் அவன் தன்னைச் சண்டாளப் புருஷனாகவே சொல்லிக் கொள்கின்றான். சாபத்தின் காரணமாக முகம் மாறிவிட்டதால் அவிமாரகனை அரசனுடைய மருமகன் என்று அறியும் ஆற்றலில்லாதவராயினர். ஒரு புறம் உடலமைப்பையும் வலிமையையும் கண்ட பூதிகனால் இவனைச் சண்டாளப் புருஷன் என்று நம்ப முடியவில்லை. ஒரு முடிவுக்கும் வராமல் வீடு திரும்புகிறான் பூதிகன்.

## 3

இடம்: அந்தப்புரம். கவலையோடு ஆசனத்தில் வீற்றிருக்கிறாள் குரங்கி. அவிமாரகனைக் கண்டது முதல் ஊணின்றி உரக்கமின்றி அவனையே நினைத்து உருகி வருகிறாள். அவிமாரகன் காட்டிய வலிமை இவளை இவ்வாறு செய்துவிட்டது. அவனைப் பார்க்காவிடில் உயிர் தரிப்பதும் அரிது என்ற கட்டத்தை அடைந்து விட்டது அவள் நிலை; பாவம், பேதை என்ன செய்வாள்! தோழிகள் மூலம் அவனை இங்கு அழைத்து வரவும் தைரியமில்லை. அவனை மறக்கவும் மனம் கேட்கவில்லை. முடிவாக அசட்டுத் தைரியம் கொண்டு ஜயா என்ற தனது தோழியை அழைத்து, ''இனி நான் அவ்வீர வாலிபனைக் காணாமல் உயிர்தரிக்க மாட்டேன்; வந்தது வரட்டும்; நீ நந்தவனத்திற்குச் சென்று அவ்வீர வாலிபனை அணுகி என் நிலையைக் கூறி இரவு பன்னிரண்டு மணிக்குச் சுரங்கமார்க்கமாக இங்கு வரச் சொல்லி வழியையும் அவனுக்குக் காட்டி வருவாய்'' என்று கூறி அனுப்புகிறாள் குரங்கி. நந்தவனத்தில் ஓர் மரத்தடியில் விதூஷகனுடன் அதே நிலையில் இருக்கும் அவிமாரகனைக் காண்கிறாள் ஜயா. அவிமாரகன் தண்ணீரும் அருந்தவில்லை; உறங்கவுமில்லை; எதையோ நினைத்து அங்கும் இங்கும் அலைகிறான். ஆனால் வழி மட்டும் அவனுக்கு ஒன்றும்

புலப்படவில்லை. அச்சமயம் தோழியான ஜயா மூலம் சேதியை உணர்ந்து, அவிமாரகன் ஆறுதல் அடைந்தான். நண்பன் விதூஷகனை அங்கேயே இருக்கச் சொல்லி விட்டுக் குரங்கியின் அந்தப்புரத்திற்கு இரகசிய மார்க்கமாக வருகிறான் அவிமாரகன்.

# 4

இவ்விதமே ஒரு வருடகாலம் குரங்கியுடன் அந்தப்புரத்தில் காலம் கழித்து வருகிறான் அவிமாரகன். இவன் இங்கு வந்து போகும் செய்தியைக் காவலாளிகள் ஒருவரும் உணரவில்லை. ஒரு நாள், ஓர் வாலிபன் இங்கு வந்து போவதாகச் சந்தேகம் கொண்டு, ஓர் வேலைக்காரன் அரசனிடம் சென்று தெரிவிக்கிறான். பூதிகன் முதலிய மந்திரிகளை அந்தப்புரத்தைக் காவல் காத்து வருமாறு ஆணையிடுகிறான் அரசன். ''இனி நாம் வழக்கம் போல் அந்தப்புரம் வருவது பெரும் ஆபத்து. இனி இப்பழக்கத்தை நிறுத்திவிட வேண்டும்'' என்று கருதி, சாமர்த்தியமாக அங்கிருந்து தப்பித்துக் கொண்டு வழக்கம் போல் வருவதை நிறுத்தி விடுகிறான் அவிமாரகன். அந்தப்புரத்தின் நாற்புறத்திலும் நாளுக்கு நாள் கட்டும் காவலும் அதிகமாகிக் கொண்டே வந்தன. குரங்கியின் பிரிவைத் தாளாத அவிமாரகன் நெருப்பில் வீழ்ந்து தற்கொலை செய்து கொள்வதையே மனது நிம்மதியடையத் தகுந்த வழியென முடிவு செய்து அப்படியே செய்யத் துணிகிறான். அக்கினி பகவானின் அருளால் சுதர்சனுக்குப் புதல்வனாகப் பிறந்த இவனை அக்கினி பகவான் சிறிதும் பீடிக்கவில்லை. உயிர் தப்பிய அவன் மறுபடியும் மலையின் உச்சியிலிருந்து கீழே வீழ்ந்து இறக்க முயல்கிறான். வானவெளி வழியாக மலையபர்வதம் சென்று கொண்டிருந்த மேகநாதன் என்னும் வித்தியாதரன் அவிமாரகன் முன் தோன்றி, ''நீ இவ்வாறு செய்யத் துணிந்த காரணம் யாது?'' என வினவுகிறான். வெட்கத்

தால் அவிமாரகன் உண்மையைக் கூறவில்லை. யோக மகிமையால் நடந்ததை அறிந்த வித்தியாதரன் அவிமாரகனை நோக்கி, ''என்னிடம் உள்ள இந்த மோதிரத்தை உன் விரலில் அணிந்து கொண்டால் நீ யார் கண்களுக்கும் அகப்படமாட்டாய். இதைப் பெற்றுக் கொண்டு இஷ்டம் போல் குரங்கியிடம் சென்று வரலாம்'' என்று கூறி ஒரு மாய மோதிரத்தை அளித்துச் செல்கிறான். அன்று முதல் அவ்வளவு கட்டுக் காவல்களையும் கடந்து குரங்கியைச் சந்தித்து வருவது சுலபமாய்விட்டது. இந்த ரகசியம் அவிமாரகனைத் தவிர வேறு ஒருவருக்கும் தெரியாது.

# 5

இடம் : அந்தப்புரத்தின் மேல் மாடி. காலம்: இரவு.

நளினிகா, மாகதிகா, விலாசினி ஆகிய பரிஜனங்களுடன் சுற்றிப் படர்ந்திருக்கும் கொடியின் அழகை அங்கு பார்த்துக் கொண்டிருக்கிறாள் குரங்கி. வழக்கம் போல் அவிமாரகன் அன்று வரவில்லை. வருத்தத்தால் அங்கு படர்ந்திருக்கும் கொடியை எடுத்துக் கழுத்தை இறுக்கிக் கொண்டு உயிரை மாய்த்துக் கொள்ளும் தருணம் வேலைக்காரிகள் திடீரென வந்து விடுகின்றனர். குரங்கியின் எண்ணம் ஈடேறவில்லை. தனக்குத் தலைவலி என்று கபட நாடகத்தால் காவலாளிகளை மருந்து வாங்கிவர மகாராணியிடம் அனுப்பிவிட்டு, மறுபடியும் தற்கொலை முயற்சியில் குரங்கி இறங்கும் பொழுது, விதூஷகனுடன் அவிமாரகன் திடீரெனத் தோன்றுகிறான். ஒரே ஆனந்தம். காதலர்கள் இருவரும் உள்ளங்கனிந்து உல்லாசமாக உறவாடுகின்றனர்.

# 6

**இ**டம்: அரசனின் அரண்மனை. குரங்கிக்குத் தகுந்த வரன் கிடைக்கவில்லையே என்று விசாரமுற்றுக் கிடக்கிறான் அரசன். தனது மருமகனை அவிமாரகன் சென்ற இடம் தெரியாமல் அதனால் இவளை அவிமாரகனுக்குக் கொடுத்து மணம் முடிக்கவேண்டுமென்று தான் செய்திருந்த முடிவை நிறைவேற்ற முடியாதவனாகி விட்டான் அரசன். பெண்ணின் பருவகாலம் கடந்துவிடுகிறதே என்று மிகுந்த கவலையுடையவனாய்த் தனது மற்றொரு சகோதரி சுதர்சனையின் மகனை ஜெயவர்மனுக்குக் குரங்கியைக் கொடுத்து விடவேண்டும் என முடிவு பண்ணினான். இதன் நடுவே அரசனின் கட்டளைப்படி அவிமாரகனைத் தேடத் தூதர்கள் சவ்வீரதேசம் சென்ற சமயம், சவ்வீர அரசன் குடும்பத்தோடு குந்தி போஜ நாட்டில் அஞ்ஞாதவாசம் செய்து வருகிற செய்தி கிட்டவே, அதை அரசனிடம் வந்து கூறுகின்றனர். பூதிகர் என்ற அமைச்சரை அழைத்து நகரம் முழுவதையும் சோதனையிட்டு சவ்வீரராஜனை அழைத்துவர உத்தரவு பிறப்பிக்கிறான். குடும்பத்தோடு சவ்வீரராஜன் பிடிபட்டு அரசனிடம் வருகிறான். அதற்குள் சாபகாலமும் கழிந்துவிடுகிறது. முனிவரின் சாபத்தால் தான் இதுவரை அஞ்ஞாதவாசம் செய்ய நேர்ந்த விவரத்தை அரசனிடம் தெரிவிக்கிறான் சவ்வீரன். அவிமாரகனின் செய்தி இவர்கள் யாவருக்குமே தெரியவில்லை. நாடு முழுவதும் அவிமாரகனை வலைபோட்டுத் தேட ஏற்பாடு நடக்கிறது. நாரதபகவான் அத்தருணம் இவர்கள் முன் தோன்றி அவிமாரகன் குரங்கியின் அந்தப்புரத்தில் மாயமாக மறைந்து வருவதைப் பற்றியும், அவ்விருவருக்கும் நடந்த கந்தர்வ மணத்தைப்பற்றியும் எடுத்துக் கூறுகிறார். இச்செய்தி எல்லோரையும் திடுக்கிடச் செய்கிறது. நாரதரின் தபோபலத்தால் அரசன் முதலியோரின் முன் திடீரென்று தோன்றி நடந்தவற்றைக் கூறுகிறான் அவிமாரகன். அவிமாரகனைக் காணாத சமயம் குரங்கியை ஜயவர்

மாவுக்குக் கொடுக்க சம்மதித்த காரணத்தால் அரசன் தனது மகளை அவிமாரகனுக்குக் கொடுத்துத் திருமணம் செய்விக்கச் சிறிது தயங்குகிறான். காரணம் வேறொன்றுமில்லை; சொன்ன பேச்சைச் சகோதரன் தவறுகிறான் என்று சகோதரி சுதர்சனை கோபித்துக் கொள்ளுவாளோ என்ற ஐயமே. அப்பொழுது, ''பிரசவ காலத்தில் சுதர்சனையென்பவள் தனது மூத்த மகனை அவிமாரகனை இரகசியமாக சுசேதனையிடம் கொண்டு விட்டச் செய்தியை எல்லோருக்கும் தெரிவித்து, அவிமாரகனும் சுதர்சனையின் மூத்த மகனுகையால் குரங்கியை அவனுக்குக் கொடுத்தால் சுதர்சனைக்கு ஒருவிதக் கோபமும் ஏற்படாது'' என்று கூறி அரசனின் சந்தேகத்தைத் தீர்த்து வைக்கிறார் நாரதர். நாரதர் மூலமாகத்தான் அவிமாரகனின் பிறவி ரகசியத்தை யாவரும் உணர்கின்றனர். குரங்கியை மணந்து அவிமாரகன் சுகமாய் வாழ்கிறான். □□

# காதம்பரி

வடக்கே புனிதமான இமயமலை. அங்கு பரமசிவன் கோயில் கொண்டு இருக்கிறான். பல கந்தர்வர்கள் அங்கு வசித்து வருகிறார்கள். இவர்களுக்குத் தலைவனான அம்சன் என்பவன் கௌரி என்பவளை மணந்து ஆண்டுவருகிறான். இவர்களுக்கு ஒரு பெண்குழந்தை பிறந்தது. வெண் தாமரையை ஒத்த தேககாந்தியைப் பெற்றிருந்தபடியால் இவளை மகாசுவேதை எனக் காரணப் பெயரிட்டு அன்புடன் வளர்த்து வருகிறான் அம்சன். அங்குள்ள அனைவருடைய அன்பையும் பெற்று வந்த மகாசுவேதைக்கு நாளடைவில் நற்பருவம் வந்தது.

ஒருநாள் அருகிலுள்ள அச்சோதம் என்னும் புண்ணியசரசில் நீராடத் தனது தாயுடன் அங்கு வருகிறாள் மகாசுவேதை. மகாராணி சரசில் இறங்கி ஸ்நானம் செய்கிறாள். இயற்கை அழகில் மதிமயங்கிக் கரையில் நிற்கும் பொழுது, என்றுமில்லாததோர் நறுமணம் இந் நங்கையின் மூக்கைத் துளைத்தது. வியப்புற்று நிற்கிறாள்

மாதரசி மகாசுவேதை.

தேவலோகத்தில் சுவேதகேது என்ற ஒரு முனிவர் இருந்தார். இவர் அழகில் மதனனையும் விஞ்சி இருந்தார். பரமசிவனின் பூஜைக்காக மலர்களைக் கொண்டுவர மந்தாகினி நதிக்கு வருகிறார் அம் மாமுனிவர். நதியில் தாமரை மலர்கள் எங்கும் மலர்ந்து பொலிந்து விளங்கின. அதனுள் இலக்குமிதேவி அமர்ந்திருக்கிறாள். மன்மத உருவங் கொண்ட அம்முனிவரைக் கண்டதும் இலக்குமி மனத்தில் சற்று மாசு ஏற்பட்டது. அதன் பயனாக அவள் ஓர் குமாரனை ஈன்றாள். தன் சங்கல்ப மாத்திரத்தினால் ஈன்றெடுத்த அக்குழந்தையைப் பெற்று, பிறவிக்குத் தக்க படி 'புண்டரீகன்' என்ற பெயரிட்டு வளர்த்து வருகிறார் முனிவர்.

சிறு வயதிலேயே எல்லாக் கலைகளையும் தந்தையிட மிருந்து பயின்று வல்லவனானான் புண்டரீகன். ஒருநாள், கபிஞ்சலன் என்ற முனிக்குமாரனுடன், தனக்கு வன தேவதை அன்பினால் அளித்த பாரிஜாத மலரைக் காதில் அணிந்து முனிவேஷத்துடன் இந்த அச்சோதம் என்ற குளக்கரையை அடைகிறான். திடீரென வந்த நறுமணத் திற்குக் காரணம் யாதென மகாசுவேதை ஐயமுற்றிருக்கும் போது முனிக்குமாரர்கள் அவளை நோக்கி வந்துகொண்டி ருக்கிறார்கள். முனிக்குமாரன் காதில் அணிந்திருக்கும் மலர் தான் இந்நறுமணத்திற்குக் காரணம் எனப் புலனாயிற்று. புண்டரீகனின் வடிவழகில் மயங்கிய மகாசுவேதை அங்கு வந்து கடைக்கண்களால் காதல் குறியுடன் வணங்கு கிறாள். மகாசுவேதையின் மாய அழகைக் கண்ட புண்டரீ கனும் அவளிடம் மயங்குகிறான். இருவருக்கும் காதல் வெள்ளம் பெருகலாயிற்று. அவள் நண்பன் கபிஞ்சலனைப் பார்த்து, ''முனிக்குமாரனே! சமீபத்திலிருக்கும் இம்முனிக் குமாரனின் பெயரென்ன? இவருடைய தந்தையாரின்

பெயர் யாது? காதில் அணிந்திருக்கும் மலர் எப்படிக் கிடைத்தது?'' என்று வினவுகிருள் மகாசுவேதை. புண்டரீ கனின் பிறப்பு, பாரிஜாத மலர் கிட்டிய செய்தி, ஆகிய வற்றைக் கபிஞ்சலனின் மூலம் உணர்கிருள் இவள். அம் மலரை அடைய ஆவலுண்டாகிறது மகாசுவேதைக்கு. பெண்களுக்கு மலர்களிடம் விருப்பம் அதிகம். அதிலும் சிறந்ததொரு மலரைப் பார்த்தால் அதை எப்படியும் அடைந்தே தீருவார்களன்ருே? இங்கிதமாக மகாசுவேதை யின் மனத்தையறிந்த புண்டரீகன் பாரிஜாதமலரை எடுத்து அவள் காதில் அணிவிக்கிருன். இருவருடைய மனமும் ஒன்ருேடொன்று கலந்தன. மகாராணி நீராட்டத்தை முடித்துக் கொண்டு சித்தமாய் இருக்கிருள் என்ற செய்தி சேடி மூலம் இங்கு வருகிறது. புண்டரீகனைப் பிரிய மன மில்லாமலே சரசில் நீராடி அந்த சரசனை நினைத்தவாறே வீடுதிரும்புகிருள் மகாசுவேதை. முனிக்குமாரனைக் கண்டது முதல் காதல் நோயால் மகாசுவேதையின் உடல் உருமாறி விட்டது. எல்லாச் சுகங்களையும் மறந்து, அவனை நினைத்தவாறே தரளிகை என்ற தோழியுடன் புண்டரீகனைப் பற்றிப் பலவாறு பேசிக் கொண்டே பகல் முழுவதையும் கழிக்கிருள். சூரியனும் மாலையில் மாயமாய் மறைந்தான்.

அச்சோதக் குளக்கரையில் மகாசுவேதையைக் கண்டது முதல், புண்டரீகனுடைய மனமும் இதே நிலையில் தான் இருந்து வருகிறது. எப்பொழுது பார்த்தாலும், மகாசுவேதை மகாசுவேதை என்ற மகாமந்திரத்தை மனத் தால் நினைத்து வாயால் ஜபித்து வருகிருன். மணிக்கு மணி காதல் நோயால் இவனுடைய உடல்நிலை படுமோசமாகிக் கொண்டு வருகிறது. உலகில் வெறுப்பு, சந்திரனைப் பழித்தல், கடவுளை ஏசுதல், பயனில்லா தனது பிறவியைப் பழித்தல் என்று இவ்வாறு பல செயல்களால் காலத்தைக் கழித்தும் பயனென்றும் பிறக்கவில்லை. மகாசுவேதை

கிடைத்தாலும் அவ்வானந்தத்தை அனுபவிக்க அதுவரை உயிர் தரிப்பேனு என்ற சந்தேகமும் அவன் மனத்தில் தோன்றி விட்டது. இன்ப துன்பங்களை மனிதன் இவ் வுலகில் அனுபவிக்க சரீரம் அல்லவா அவனுக்கு மூலகாரண மாய் அமைந்திருக்கிறது? தனது நண்பன் கபிஞ்சலனைப் பார்த்து, ''இந்நோயைப் போக்க உன்னுல் இயன்ற உதவியை நீ செய்ய வேண்டும்'' எனக் கூறுகிருன் புண்டரீகன். குளிர்ந்த தாமரைத் தண்டுகளால் ஓர் படுக்கையைச் செய்து அதன் மூலம் காதல் கனலை நண்பன் தணித்துக் கொள்ளட்டும் என்று எண்ணிப் புண்டரீகனை அதில் படுக்கச் செய்து, மகாசுவேதையை இங்கு அழைத்து வரச் செல்கிருன் கபிஞ்சலன். காவலாளர்கள் மூலம் கபிஞ்சலன் வரவை உணர்ந்து இவனை உள்ளே வர உத்தர விடுகிருள் மகாசுவேதை. இருவரும் பேசுகிருர்கள். புண்டரீகனின் நிலையை எடுத்துரைத்து, ''நண்பனைக் காக்க அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டுகிருன் கபிஞ்சலன். சில நாட்களாக மனநிம்மதியில்லாமல் ஏதோ ஒரு வித மாகத் துயரமுற்றிருக்கும் தனது மகளைக் காண மகாராணி இங்கு வரும் செய்தி கிட்டுகிறது மகாசுவேதைக்கு. தனது விருப்பத்தை முடிவாகச் சொல்லிவிட்டு அங்கிருந்து வெளி யேறுகிருன் கபிஞ்சலன். மகாராணி மகளுக்கு நல்ல வார்த்தைகள் சொல்லி மனத்தைத் தேற்றிவிட்டுச் செல்லுகிருள்.

விரக வேதனையால் இதுவரையில் நேரில் நடந்த தெல்லாம் கனவில் கண்டது போன்ற மதிமயக்கம் மகாசு வேதைக்கு உண்டாயிற்று. காதல் நோய் கண்டால் எது நிஜம் ; எது சொப்பனம் என்ற பகுத்தறிவும் பறந்து போய் விடும்! பூர்ண சந்திரன் உதயமாகிருன். இதற்குள் சுய நினைவு வந்து பெரியோர்கள் என்ன நினைப்பார்கள் என்பதை யும் மறந்து, புண்டரீகனை இவ்விபத்திலிருந்து தப்புவிக்க எண்ணியவளாய்த் தரளிகையுடன் குளக்கரைக்கு வருகிருள்

மகாசுவேதை. வரும் வழியில் சில அபசகுனங்கள் ஏற்பட்டும் அதைப் பொருட்படுத்தாமலேயே விரைந்து செல்கிருள். ''என் பிரிய நண்பனே! நீ இப்படி என்னைத் தனியே விட்டுப் போகலாமா? விதியே! என் நண்பனைப் பிரித்துச் சதி பார்ப்பது பாவமன்ருே? நண்ப! நானும் உன்னைத் தொடர்ந்து வருகிறேன். நீ இல்லாது இவ்வுலகில் வாழ இடமில்லை'' என்ற கபிஞ்சலனுடைய அழுகைக் குரல் கேட்டது. மகாசுவேதைக்கு ஒன்றும் தோன்றவில்லை. கால்களும் முன்னே செல்ல மறுத்துவிட்டன.

மெல்ல மனத்தைத் தேற்றிக் கொண்டு குளக்கரைக்கு வருகிருள். பெரிய கற்பாறை. அதில் தாமரைத் தண்டுகளால் செய்த படுக்கை. உயிரிழந்த காதலன் படுத்திருக்கிருன். சமீபத்தில் கண்ணும் கண்ணீருமாய்க் கதறிக் கொண்டிக்கும் கபிஞ்சலனின் காட்சி. மெய்மறந்த இத் தோற்றத்தைக் கண்டுச் சகிக்காமல் ஒன்றையும் சொல்ல நினையாது திகைத்து நின்றுவிடுகிருள் மகாசுவேதை. புலம்புகிருள்! விம்முகிருள்! என்ன செய்தால் என்ன? நிலைமையில் மாறுதல் ஒன்றும் இல்லை. நடப்பது நடந்து விட்டது. தானும் உயிர் துறக்கச் சித்தமாகிருள். இது ஒருபுறம். மற்ருெருபுறம் ஆகாயத்தில் இருந்து ஓர் திவ்விய புருஷன் சந்திர பிம்பத்திலிருந்து வெளிக் கிளம்பி இங்கு வந்து புண்டரீகனை எடுத்துக் கொண்டு மகாசுவேதையை நோக்கி, ''பெண்ணே! உயிரை மாய்த்துக் கொள்ளாதே! நீ சீக்கிரமே இவனை மறுபடியும் இவ்வுலகில் சந்திக்கப் போகிருய்'' எனச் சொல்லி வானத்தில் மறைந்து விடுகிருன். நண்பனைப் பிரிந்து உயிர் வாழமுடியாது கபிஞ்சலனும் நண்பனைத் தொடர்ந்து வானவழியே ஏறிச் செல்கிருன். ஒரு நொடியில் மாயமாய் அவர்கள் மறைந்து விடுகிருர்கள். இரவு முழுவதையும் குளக்கரையில் கழிக்கிருள் மகாசுவேதை. கதிரவன் கிழக்கே தோன்றினுன். வாழ்க்கையை யாவரும் வெறுக்கத்தானே செய்வர்? அதிலும் காதலர்கள் விஷயத்தில் இது மிகவும் சகஜம்.

புண்டரீகன் அணிந்திருந்தக மண்டலம். மரவுறி, ஜபமாலை ஆகியவைகளைத் தான் அணிந்து பிரம்மசரிய விரதம் பூண்டு, தாய் தந்தையர்களின் பேச்சைப் புறக்கணித்து மணத்திற்குச் சம்மதிக்காமல் அங்குள்ள சித்தாசிரமத்தில் சிவபெருமானின் முன்னிலையில் இருந்து, அவனை வாயாரப்பாடி, காலம்கழித்து வந்தாள் மகாசுவேதை. திவ்யபுருஷனின் சொற்படி மறுபடியும் புண்டரீகனைச் சந்திக்கும் பாக்கியம் எப்படியும் கிடைக்குமென ஆசையினால் காலம் கழித்து வருகிறாள் இவள்.

## 2

இடம்: வானவழி. புண்டரீகனும் திவ்யபுருஷனும் முன்னே செல்கிறார்கள். நண்பனைக் கூப்பிட்டுக்கொண்டே பின்தொடர்கிறான் கபிஞ்சலன். கேள்விக்கு பதில் இல்லை. நட்சத்திர மண்டலம் கடந்து சந்திர மண்டலம் வருகிறது. அங்கு ஒரு கட்டிலில் புண்டரீகனைப் போட்டு, கபிஞ்சலனைப் பார்த்து, ''முனிக்குமாரனே! நான்தான் சந்திரபகவான். உன் நண்பனான புண்டரீகன் புவியில் பிறந்து, பெண்ணைக் காதலித்து விருப்பம் ஈடேறாது தவிக்கும்படியாக என்னை ஒருகால் சபித்துவிட்டான். அதனால் சீற்றங் கொண்ட நானும், நான் புவியில் பிறக்கும் பொழுது ஒவ்வொரு பிறவியிலும் நீயும் என்னுடன் கூடப்பிறந்து இன்பதுன்பங்களை என்னுடன் கூடச் சமமாக அனுபவிக்கக்கடவாய்'' என புண்டரீகனுக்கு மறுசாபம் கொடுத்தேன். அதன்படி இனி இவன் புவியில் இருமுறை தோன்றப் போகிறான். அப்பொழுது நானும் அவனுடனேயே ஜனிக்கப் போகிறேன். அதுவரை உன் நண்பனுடைய உடல் இங்கு பத்திரமாக இருக்கும். இனி சுவேதகேதுமுனிவரிடம் சென்று, இதற்கு ஏதாவது பரிகாரம் தேட முடியுமானால் கேட்டுத்

தெரிந்துகொள்'' என்று கூறி, அத் திவ்யபுருஷன் மறைந்தான். வானவழியே திரும்பிப் பூலோகம் வந்து கொண்டிருக்கிறான் கபிஞ்சலன். பெருந்துயரத்தால் ஆகாயத்தில் சென்றுகொண்டிருக்கும் ஓர் கந்தர்வனை அறியாமையினால் அலட்சியமாகத் தாண்டிச் செல்கிறான் கபிஞ்சலன். இது கந்தர்வனுக்குச் சீற்றத்தை அளித்தது. ''என்னைக் குதிரை போல் அவமரியாதையாகத் தாண்டிச் சென்றதால் நீ புவியில் குதிரையாகப் பிறக்கப் போகிறாய்'' என்று கந்தர்வ சாபம் கிடைக்கிறது கபிஞ்சலனுக்கு. கந்தர் வனுடைய காலில் வீழ்ந்து மன்றாடவே, ''நீ எவனுக்கு வாகனமாய் இருப்பாயோ அவன் இறந்தவுடன் நீயும் ஜலத்தில் வீழ்ந்து சாபத்தைத் தீர்த்துக்கொள்வாய்'' என்று தேறுதல் வார்த்தை கூறுகிறான் கந்தர்வன். குதிரைப்பிறவியிலும் நான் புண்டரீகனை விட்டுப் பிரியாமல் இருக்கும்படி அருள் புரிய வேண்டும்'' என்று கபிஞ்சலன் பிரார்த்திக்க, சிறிது யோசனை செய்து விட்டுக் கபிஞ்சலனைப் பார்த்து, ''உஜ்ஜயினி நகரில் புத்திரபாக்கியம் இல்லாது தவிக்கும் தாராபீடன் என்ற அரசனுக்குச் சந்திரன் மகனாகவும், மந்திரி சுகநாசனுக்குப் புண்டரீகன் மகனாகவும் பிறக்கப் போகிறார்கள். நீ அவ் வரசகுமாரன் ஏறிச் செல்லும் குதிரையாகப் பிறக்கப் போகிறாய்'' என்று பதிலளிக்கிறான் கந்தர்வன். சாபப்படி கபிஞ்சலன் கடலி லிருந்து இந்திராயுதம் என்ற குதிரையாய்ப் பிறந்து பாரஸீக மன்னனிடம் சேருகிறான். தனது தலைவனை தாராபீடனுக்கு இந்திராயுதத்தைப் பாரஸீக மன்னன் பரிசாக அளிக்க, கபிஞ்சலன் குதிரை வடிவத்தில் அரசனிடம் வளர்ந்து வருகிறான்.

**உ**ஜ்ஜயினி என்றொரு பெரிய நகருண்டு. அதற்கு அரசன் தாராபீடன். சுகநாசன் என்பவன் இவன் மந்திரி. ராஜ்ய தந்திரங்களில் கைதேர்ந்தவனாதலால் அரசாங்க நிர் வாகப் பொறுப்பு சுகநாசனுக்கே உரியதாக இருந்து வந்தது.

அரசனுக்கு வெகுநாட்களாகியும் புத்திரபாக்கியம் கிடைக்கவில்லை. ஒரு நாள், தனது மனைவி விலாசவதியின் வாயினுள் சந்திரன் புகுவதுபோல் கனவு கண்டான் அரசன். மறு நாள் இச் செய்தியை அரசனிடம் கேட்ட சுகநாசன், அதே இரவு தனது மனைவி மனோரமா என்பவளின் மடியில் வெண் தாமரை மலர் வைத்திருப்பது போல் தானும் கனவு கண்டதாக அரசனிடம் கூறுகிறான். விடியற்காலையில் கண்ட இக் கனவு நிச்சயமாய் பலிக்கும் என அரசனும் மந்திரியும் எண்ணி மகிழ்ந்தனர். நாளடைவில் விலாசவதி வயிற்றில் சந்திரனும், மனோரமா வயிற்றில் புண்டரீகனும் வளர்ந்து வருகின்றனர். இருவருக்கும் ஆண்குழந்தை பிறக்கிறது. கனவுக்குத் தக்கபடி அரசகுமாரனுக்கு சந்திராபீடன் என்றும், பிராமண உத்தமராகிய சுகநாசருடைய மகனுக்கு வைசம்பாயனன் எனவும் பெயரிட்டு வளர்த்து வருகிறார்கள். இவ்விரு குமாரர்களும் ஒருங்கே குருகுலவாசம் செய்து எல்லா கலைகளிலும் வல்லவராயினர். பால்யத்திலிருந்து இருவருமே இணைபிரியாத நண்பர்கள். பருவமடைந்த சந்திராபீடனுக்கு இளவரசப்பட்டம் சூட்டினான் அரசன். உடனே திக்விஜயம் செய்து சிற்றரசர்களையெல்லாம் வென்றுவர பாரஸீக மன்னன் தனது தந்தைக்குப் பரிசாகக் கொடுத்த இந்திராயுதத்தை வாகனமாகக் கொண்டு தோழன் வைசம்பாயனனுடன் மற்ற படைகள் சூழ, திக்விஜயத்திற்குப் புறப்படுகிறான் சந்திராபீடன்.

## 3

சுவர்ணபுரம் என்றோர் நகரம். அதைச் சுற்றிலும் விசாலமான காடு. அதற்குச் சற்று வடதிசையில் கம்பீரமான இமயமலை. திக்விஜயத்தை முடித்துக் கொண்டு சந்திராபீடன் இளைப்பாற படைகளுடன் சுவர்ணபுரம் வருகிறான்.

இந் நகரத்தைச் சுற்றி வேடர்கள் அதிகமாக வசித்து வரு கிறார்கள். இங்கு சிலநாட்கள் இருந்து ஓய்வு எடுத்துக் கொள்கிறான் சந்திராபீடன். வழக்கம்போல் ஒருநாள் இந்திராயுதத்தின் மீது ஏறி அதிகாலையில் தனியாக வேட்டையாடக் கானகம் செல்லுகிறான். அப்பொழுது ஓர் கின்னரத் தம்பதிகள் மலையிலிருந்து இறங்கி வருகிறார்கள். இதுவரை என்றுமே கண்டிராத அவ்விரட்டை உருவங் களைக் கண்ட சந்திராபீடனுக்குப் பெரும் வியப்பு உண்டா யிற்று. அவர்களைப் பிடிக்க குதிரையை வேகமாகச் செலுத்து கிறான். கின்னரத்தம்பதிகள் இவனை ஏமாற்றி மலைமீது ஏறி மாயமாய் மறைந்தனர். ஓடி ஓடிக் களைத்து மலைமீது ஏறி அவர்களைக் காணுமல் வருந்துகிறான். உச்சிவேளை. குதிரை களைத்துவிட்டது. அரசகுமாரனும் களைத்து உடம் பெல்லாம் வேர்வைசொட்ட மேலே செல்லச் சக்தியற்ற வனாய்விட்டான். இதன் நடுவில் தாகம் வேறு அதிகமாய் விட்டது. ''இப்பொழுது எங்கிருக்கிறோம்? சுவர்ணபுரம் எந்தத் திக்கில் இருக்கிறது?'' என்று ஒன்றும் புரியவில்லை. அங்கிருந்து சமீபத்திலொரு குளம் காணப்பட்டது. இது தான் அச்சோதம் எனப் புகழ்பெற்ற புனிதமான இடம். அங்கு சென்று களைப்பாறிக் கொள்ளலாம் என நினைத்தான் சந்திராபீடன். நீரைப்பருகி குதிரையை நீர் பருகச்செய்து, ஊர் திரும்புவதற்கு மேலே செய்யவேண்டியவற்றை நினைத் தவாறு ஓர் மரத்தடியில் சிந்திக்கலானான். அப்பொழுது இனிய கீதம் ஒன்று தென்றலோடு கலந்துவந்து களைப் புற்றிருக்கும் இவனுடைய காதில் புகுந்து இவனைக் களிப் புறச் செய்தது.

இமயமலையில் சித்திராங்கதன் என்ற கந்தர்வன் மதிரா என்ற மனைவியுடன் அரசுபுரிந்து வருகிறான். இவனுடைய பெண்தான் கதாநாயகியான காதம்பரி என்பவள். அழகில் ரதியின் அவதாரம் போன்றவள். காதம்பரியும் மகாசுவேதையும் பால்ய சிநேகிதிகள். மகாசுவேதை வாழ்க்கையை வெறுத்து சித்தாசிரமத்தில்

வாழ்ந்து வருவதை அறிந்த காதம்பரி, தாய் தந்தையர்களின் சொல்லையும் மதியாது தனது தோழி மகாசுவேதை கஷ்டப்படும்போது தான்மாத்திரம் மணந்து வாழ்வது எதற்கு? என்று வைராக்கியத்தோடு கன்னியாகவே காலம் கழித்து வருகிறாள். தாய் தந்தையர்கள் எவ்வளவு சொல்லியும் சிறிதேனும் மனமாற்றம் ஏற்படவில்லை. பெண்களின் பிடிவாதம் மிகப் பொல்லாதது. அதை மாற்ற எவராலும் முடியாது. முடிவு எப்படியாயினும் பிடித்த பிடிவாதத்தைச் சாதிப்பது பெண்குலத்தின் பண்பு. ''உனது தோழியான காதம்பரியின் மனப்போக்கை மாற்றி அவளை வாழ்க்கைப் பாதையில் திருப்பி நீதான் வாழவைக்க வேண்டும்'' என்று பெற்றோர்கள் மகாசுவேதைக்குச் செய்தி அனுப்புகிறார்கள். ''எனக்காக நீ மணம்புரிந்து உன் பெற்றோர்களைத் திருப்தி செய்யவேண்டும்'' என்ற செய்தியோடு தரளிகா என்பவள் மகாசுவேதையிடமிருந்து இங்கு வருகிறாள். இதற்குள் அந்திப்பொழுது வந்தது. மாலைக் கடனைக் கழித்துவிட்டு பரமசிவன் முன்னிலையில் அமர்ந்து பரவசமாய்த் துதிப்பாடல்களைப் பாடிக் கொண்டிருக்கிறாள் மகாசுவேதை.

## 4

அங்கு மரத்தடியில் படுத்திருந்த சந்திராபீடன் இனியகீதம் கேட்டு, அதுவரும் வடதிசையை நோக்கிக் குதிரையின்மீது வருகிறான். அங்கு சிறந்ததோர் சிவாலயம். அதனருகே இடுப்பில் மரவுறி, கையில் ஜபமாலை; இக்கோலத்தோடு ஓர் பெண்மணி பரமனை உள்ளம் உருகத் துதி செய்துகொண்டிருப்பதைக் கண்டான். அங்கு வந்திருக்கும் சந்திராபீடனை அவள் உணரவில்லை. காரணம் மெய்ம்மறந்து பாடுவதே. ஞானக்கண்ணால் கடவுளைக்

காணும் பொழுது ஊனக்கண்ணின் பார்வை ஊனமாய் விடுவது உலக இயல்புதானே? சற்று நேரம் செல்ல, மாலை பூஜை முடிகிறது. திரும்பிப் பார்க்கிருள். அங்கு குதிரை யுடன் நிற்பவன் ஓர் இளவரசன். அவனை ஒரு விருந்தாளி யாக பாவித்துத் தனது இருப்பிடமான குகைக்குள் அழைத்துச் சென்று, முறைப்படி கனிகளால் உபசரித்து மகிழ்ந்தாள்.

இருவரும் மாலைக்கடனை முடித்துத் தனித்தனியே ஒரு பாறையில் அமர்ந்தனர். அரசகுமாரனின் வரலாற்றை அறிய ஆவல் கொண்டாள் மகாசுவேதை. நடந்ததை எல்லாம் கூறி இங்கு வந்ததை விவரமாகக் கூறுகிருன் சந்திராபீடன். மனித சஞ்சாரமில்லாத இக் கானகத்தில் வயதுக்குத்தகாத இத் தவக்கோலத்துடன் மகாசுவேதை தனியாய் தங்கியிருக்கக் காரணம் யாதென மனத்தில் எண்ணி அதைக் கேட்கலானுன். தனது பிறவி முதல் தரளிகைமூலம் காதம்பரியிடமிருந்து கிடைத்த கடைசிச் செய்திவரையாக கதையனைத்தையும் கூறுகிருள் மகாசுவேதை. அவளுடைய சரித்திரத்தைக் கேட்டது முதல் அவளிடம் இவனுக்கு அலாதியான ஓர் கௌரவம் பிறந்தது. கதை முடிவதற்கும் பொழுது விடிவதற்கும் சரியாய் இருந்தது. இருவரும் காலைக் கடமையை நிறை வேற்றுகின்றனர். காதம்பரியிடமிருந்து தரளிகை கேயூரகன் என்ற வேலைக்காரனை வழித்துணையாகக் கொண்டு அச் சமயம் இங்கு வருகிருள். காதம்பரியின் உறுதியான உள்ளத்தை எடுத்துரைக்கிருன் கேயூரகன். நேரில் சென்று காதம்பரியின் மனத்தை மாற்றவேண்டும் என்பது மகாசு வேதையின் கடைசி முடிவு. தற்செயலாகத் தனக்கு அதிதி யாக வந்திருக்கும் சந்திராபீடனையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு அப்பட்டணத்தின் மாண்பை அவனுக்குக் காட்டுவதற்காகக் காதம்பரியிடம் வருகிருள் மகாசுவேதை.

**இடம்** : காதம்பரியின் அரண்மனை. படுக்கையில் உட்கார்ந்திருக்கிறாள் காதம்பரி. மகாசுவேதை காதம்பரியைக் காண உள்ளே வருகிறாள். சந்திராபீடன் குதிரையை வெளியில் நிற்க வைத்துவிட்டு அவளைப் பின் தொடர்கிறான். எழுந்தோடிவந்து, பால்ய சிநேகிதி மகாசுவேதையை ஆனந்தக்கண்ணீர்வடிய அணைத்துக் கொண்டு ஆனந்தப் பரவசமாகிறாள் காதம்பரி. ஒருவரை ஒருவர் க்ஷேமம் விசாரித்துக் கொள்கின்றனர். அருகில் இருந்த சந்திராபீடனை யாரெனக் காதம்பரிக்கு அறிமுகம் செய்து வைக்கிறாள் மகாசுவேதை. தன்னைப்போல் அவனையும் நண்பனாகவே பாவித்து வருமாறு கட்டளையிடுகிறாள். தன்னில்லம் தேடிவந்த சந்திராபீடனையும் மகாசுவேதையையும் ஆசனத்தில் அமரச்செய்து பிரமாதமாக உபசரிக்கிறாள். அப்பொழுது சந்திராபீடனுக்கும் காதம்பரிக்கும் மனம் ஒன்றுசேர்கிறது. இவனைக் கண்டவுடனே கன்னியாகவே காலம்கழிப்பேன் என்ற காதம்பரியின் கருத்துக்களெல்லாம் கனவுபோல் கணப்பொழுதில் மறைந்துவிட்டன. பெண்களுக்கு வைராக்கியம் வருவது ஒரு நொடியில்; மறைவது அரை நொடியில். சித்திராங்கதன் மகாசுவேதையை அழைத்து வருமாறு சொல்லி அனுப்பிய செய்தியைச் சேவகன் அங்கு வந்து தெரிவிக்கிறான். சந்திராபீடனைத் தான் திரும்பிவரும்வரை காதம்பரியிடமே இருக்கச்சொல்லி கந்தர்வநகரம் செல்லுகிறாள் மகாசுவேதை. அந்தப்புரத்திற்கு அருகிலுள்ள ஓர் மாளிகையில் தங்கிவருகிறான் சந்திராபீடன். ராஜ உபசாரம் நடக்கிறது. எப்பொழுது பார்த்தாலும் காதம்பரியின் நினைவுதான். ''சிறுவயதில் செய்த சபதத்தை மறந்து, பெற்றோர்கள் அனுமதியின்றி இவ் வாலிபனை இங்கு தங்கியிருக்கும்படி அனுமதியளித்த என் பேதமையை என்னவென்று சொல்வது? பெரும் தவற்றைச் செய்துவிட்டேன்'' என்ற கவலை ஒருபுறம் காதம்பரியை கலங்கவைக்கிறது; சந்திராபீடனுக்கும் தனக்கும் நடந்த சம்பாஷணைகளை நினைத்து மற்றொருபுறம் மகிழ்கிறாள் காதம்பரி. பெண்களுக்கு

இவ் விஷயத்தில் தைரியம் நிலைபெற்றிராது. உறுதியும் ஒரே மாதிரி இராது. எண்ணங்கள் மாறி மாறி மனத்தைக் குலைப்பது மங்கையரின் மடமைக்கு எடுத்துக்காட்டு. இரவு வேளை வந்தது. துணிந்து சந்திராபீடனைக் காண அவன் இருப்பிடம் வந்து, அவனுடைய வரலாற்றைக் கேட்கிறாள் காதம்பரி. தனது குலப்பரம்பரையையும் நடந்த செய்தியையும் கூறுகிறான். பேசப்பேச பாசமும் நேசமும் இருவரிடையே படர்கிறது. நள்ளிரவில் நாயகனும் நாயகியும் நாணத்தால் தம்மிருப்பிடம் சென்றுவிடுகின்றனர்.

# 5

கதிரவன் ஒளி வீசுகிறான். சந்திராபீடன் நித்திரையை விட்டு எழுந்திருக்கிறான். மகாசுவேதை திரும்பி வந்து காதம்பரியிடம் பேசிக்கொண்டிருக்கும் செய்தி கிட்டியதும் இளவரசன் அங்கு செல்கிறான். எல்லோருமாகக் கலந்து பேசுகிறார்கள். சந்திராபீடன் ஊர் திரும்பிச் செல்ல இருப்பதை இங்கிதமாக அறிந்த மகாசுவேதை, காதம்பரியிடம் அனுமதி கேட்கிறாள். ''சரி'' என்ற பதில் அரை மனத்தோடு வருகிறது. விடைபெற்று இளவரசனும் இந்திராயுதம் ஏறி அச்சோதக் குளக்கரைக்குப் பயணமானான்.

இடம்: சுவர்ணபுரம். வைசம்பாயனன் முதலியவர்கள் விழித்துக்கொண்டு சந்திராபீடனைக் காணாது தேடி அலைகிறார்கள். வெகுநாட்களாகிவிட்டன. இளவரசன் வரவில்லை. படைகளோடு இந்திராயுதத்தின் காலடியை அடையாளமாக வைத்துக்கொண்டு அச்சோதக் குளக்கரைக்கு வருகிறான் வைசம்பாயனன். இளவரசனும்

வைசம்பாயனனும் சந்திக்கிறார்கள்; பேரானந்தம். உடனே அங்கு கூடாரம் அமைக்கப்படுகிறது. மகாசுவேதை, காதம்பரி முதலியவர்களைச் சந்தித்து நடந்தவற்றை யெல்லாம் கதைகதையாக இரவுமுழுவதும் கூறுகிறான் சந்திராபீடன்.

பொழுது புலர்ந்தது. காதம்பரியின் தூதன் கேயூரகன் குளக்கரைக்கு வருகிறான். சந்திராபீடனைப் பிரிந்த காதம்பரியின் காதல்காட்சி சித்திரமாக்கப்பட்டு கேயூரகனால் சந்திராபீடன் முன்னிலையில் காட்டப்படுகிறது. உடனே உங்களை அழைத்துவருமாறு காதம்பரியின் உத்தரவு எனக் கூறுகிறான். அடுத்த நிமிஷமே பத்ரலேகா என்ற வேலைக்காரியைத் துணையாகக் கொண்டு காதம்பரியிடம் வருகிறான் சந்திராபீடன். அவள்மனம் நிம்மதியடைகிறது. முகமலர்ச்சியோடு இளவரசனை உபசரிக்கிறாள். பத்ரலேகையை காதம்பரிக்கு அறிமுகம் செய்விக்கிறான் சந்திராபீடன். ''இப்பொழுது உங்கள் உடல்நிலை எப்படி இருக்கிறது?'' என்று பரிகாசமாகக் கேட்க, வெட்கத்தால் அவள் பதில் கூறவில்லை. பத்ரலேகையை அவள் வேண்டுகோளின்படிக் காதம்பரியிடமே இருக்கச் சொல்லி, சேனைகள் இருக்குமிடம் வருகிறான் இளவரசன்.

## 6

இடம்: உஜ்ஜயினி நகரம். திக்விஜயம் செய்யச் சென்ற தன் அருமை மகன் திரும்பி வராததால் தாராபீடன் துயரம் கொண்டான். அரசனிடமிருந்து கடிதத்தைப் பெற்று எங்கும் தேடி அலைகிறான் அரசதூதன். கடைசியாக அச்சோதக் குளக்கரையில் இருப்பதாகச் செய்தி

கேட்டு அங்கு வருகிறான் தூதன். இளவரச தரிசனம் கிடைக்கிறது. தந்தையினுடைய கடிதத்தைப் படித்துப் பார்க்கிறான் இளவரசன். தாய்தந்தையர்கள் தன்னைப் பிரிந்த துயரத்தால் வருந்தி உடனேயே தன்னைக்காண விரும்புவதாகக் கடிதத்தில் செய்தி இருந்தது. உடனே படைத்தலைவனான மேகதூதனைப் பார்த்து, ''பத்ரலேகை ஏதாவது செய்தி கொண்டுவந்தால் உடனே அவளை என்னிடம் அழைத்து வரவும்'' எனக் கட்டளையிட்டு, சேனையையெல்லாம் நாடுசேர்ப்பிக்கும்படி வைசம்பாயனனிடம் சொல்லி, உஜ்ஜயினி வருகிறான் சந்திராபீடன். தாய் தந்தையர்கள் வெற்றியுடன் வந்த மகனைக் கண்டுகளிக்கின்றனர். சில நாட்களுக்குள்ளாக பத்திரலேகையை அழைத்துக்கொண்டு உஜ்ஜயினி வருகிறான் மேகதூதன். காதம்பரி படும் வேதனைகளை இளவரசன் உணர்கிறான். காதம்பரியின் நினைவாகவே காலம் கழிக்கிறான் சந்திரா பீடன். நாளுக்குநாள் நாயகியின்நிலை மோசமாய் வருவதை கேயூரகன் மூலம் அறிந்து தந்தையிடம் விடை பெற்றுக் காதலியைக் காணச் செல்லுகிறான் சந்திராபீடன்.

**இடம்** : அச்சோதக் குளக்கரை. சேனைகளைக் காப்பாற்றிக்கொண்டு வைசம்பாயனன் இங்கு வசித்து வருகிறான். குளக்கரையின் அழகு, இயற்கையின் இனிய சக்தி, தேவாலயத்தோற்றம் இவைகள் வைசம்பாயனனுக்கு வைராக்கியத்தை உணர்த்தி இங்கேயே தங்கிவரலாம் என்ற கருத்தை ஏற்படச் செய்தன. சேனைகளை மாத்திரம் நகருக்கு அனுப்பிவிட உத்திரவிடுகிறான். அவைகள் இவனைப் பிரிந்து வருத்தத்தோடு வீடு திரும்புகின்றன. சரசில் நீராடி சிவ தேவாலயத்திற்கு வைராக்கியத்தோடு வருகிறான் வைசம்பாயனன். இயற்கையின் அழகு இதயத்தை மாற்ற எவ்வளவு உதவுகின்றது என்பது புலனாகிறது. மனிதனுக்கு அறிவை அளிப்பது இயற்கையே! அறிவை அழிப்பதும் இயற்கையே! இயற்கையால் எதையும் செய்யமுடியும்! அது மனிதனை

இன்பத்திற்கு இழுத்துச் செல்லும்; வைராக்கியத்தை வளர்க்கவும் செய்யும். அங்கு பரமனுக்கு எதிரில் அழகான ஒரு பெண் மணி வயதுக்குச் சற்றும் தகாத தவக்கோலத்துடன் பரமனைத் துதி செய்துகொண்டிருக்கிறாள். ''வேஷத்திற்கும் வயதிற்கும் சற்றுமே பொருந்தாத முறையில் ஏன் இங்கு இருந்துகொண்டு இல்லற வாழ்க்கையைத் துறந்து வாழ்நாளை வீண் நாளாக்குகிறாய்?'' என்று மனதைத் தட்டி எழுப்புவது போல் கேட்கிறான் வைசம்பாயனன். தப்பபிப்பிராயத்தோடு தன்னை இவன் நாடி வந்திருக்கிறான் என்பதை அறிந்து மகாசுவேதை, தோழியின் மூலம் அவனை வெளியேறச் சொல்லுகிறாள். விதியின் விளையாட்டால் வைசம்பாயனன் மறுபடியும் அதே கேள்வியைக் கேட்கிறான். இதற்குக் காரணம் முற்பிறவியில் தனக்கும் அவளுக்கும் இருந்த உறவு உள்ளத்தில் ஒருவாறு உதித்ததேயாகும். மகாசுவேதை கோபத்தோடு அவனைச் சந்திராபீடனின் நண்பன் என்பதையும் அறியாமல் ''நான் புண்டரீகன் ஒருவனையே காதலிப்பது உண்மையானால் கிளிபோல் சொன்னதையே சொல்லும் இவன் கிளியாகக்கடவது'' என்று சாபமிட்டாள். உடனே கிளியாகி விந்தியமலைக்கு அருகிலுள்ள காட்டையடைந்தான் வைசம்பாயனன். பிறகு சேனையின் மூலம் இவனை சந்திராபீடனின் நண்பன் என்று உணர்ந்த மகாசுவேதை வருத்தமடைந்தாள்.

இடம் : உஜ்ஜயினி. சேனைமுழுவதும் சுவர்ணபுரம் வந்திருப்பதாகத் தூதர்கள் மூலம் அறிந்துகொண்டான் சந்திராபீடன். வெகுநாட்களாக வைசம்பாயனனைக் காணாதிருந்த கவலையால் அவனைப் பார்க்க எண்ணி பத்ரலேகை, மேகதூதன், கேயூரகன் ஆகியவர்களைக் காதம்பரியிடம் இருக்கச் சொல்லிக் காதலியிடம் விடைபெற்றுத் தனியாக சுவர்ணபுரம் வருகிறான் சந்திராபீடன். வைராக்கியத்தால் வைசம்பாயனன் அச்சோதக் குளக்கரையையே தனக்குத் தஞ்சமாகக் கொண்டு

விட்டான் என்று அறிகிருன் சந்திராபீடன். இச் செய்தி அவனுக்கு மிக்கவருத்தத்தை அளித்தது. உடனே குதிரை மீது ஏறி குளக்கரைக்கு வருகிருன் இளவரசன். எங்கு தேடியும் நண்பனைக் காணவில்லை. கடைசியாக மகாசு வேதையின் இருப்பிடம் வருகிருன். இவனைக்கண்டதும் தாரைதாரையாகக் கண்ணீர்பெருக வைசம்பாயனனைத் தான் கிளியாகச் சபித்த செய்தியை இளவரசனிடம் கூறி வருந்துகிருள் மகாசுவேதை. மூர்ச்சையுற்றுத் தரையில் வீழ்கிருன் இளவரசன். உயிர் உடலைவிட்டுப் பிரிகிறது. இதல்லவா நட்பு! நண்பனுக்காக உயிரையே தியாகம் செய்த உத்தமனை உலகம் என்றுமே மறக்காது. மகாசு வேதை கதறுகிருள். தற்செயலாகக் காதம்பரி மகாசு வேதையைப் பார்த்து விட்டுப்போக அங்கு வருகிருள். காதலன் காலனுல் கவரப்பட்டுக் கீழேபடுத்திருப்பது இவளைத் திடுக்கிடச் செய்தது. தானும் கீழேவீழ்ந்து மூர்ச்சையடைகிருள். சிறிதுநேரம் கழித்துச் சுயஉணர்வு பெற்றுச் சந்திராபீடனைத் தனது மடியில் போட்டுக் கொண்டு ஏதேதோ சொல்லிப் புலம்புகிருள் காதம்பரி. அப்பொழுது சந்திராபீடனுடைய உடலிலிருந்து ஓர் ஒளி வானத்தையடைந்து மகாசுவேதையை நோக்கி, ''உனது காதலன் புண்டரீகனுடைய உடலை உயிருடன் சீக்கிரமே காணப்போகிருய்'' என்று சொல்லி, மறுபுறம் காதம்பரியை நோக்கி, ''சந்திராபீடனின் தேகம் என்னுடைய தேஜோமயமானது. இவன் உயிர்பெறும் வரை இவ்வுடலை நீ பத்திரமாகப் பார்த்து வரவேண்டும்'' என்று சொல்லி மறைந்தது. எஜமானனுடைய மரணத்தால் வருந்திய பத்ரலேகை என்பவள் ஆவேசங் கொண்டு இந்திராயுதம் என்ற குதிரையோடு அச்சோதக் குளத்தில் விழுந்து மடிகிருள். காதம்பரி, மகாசுவேதை இருவரும் குளக் கரையை அடைகின்றனர். சந்திரன், தனக்குக்கிடைத்த சாபப்படி சந்திராபீடனின் உடலைவிட்டு விதிசாநகரில் சூத்திரகன் என்னும் அரசனுகப் பிறந்து வளர்ந்து வருகிருன்.

# 7

குளத்தில் விழுந்தவுடன் கபிஞ்சலன் கந்தர்வ சாபப்படி குதிரை உருவத்தை இழந்து சுய உருவத்துடன் வானத்தையடைந்து, மகாசுவேதையை நோக்கி, புண்டரீகன் உயிர்துறந்தது, தான் அவனைப்பின் தொடர்ந்தது, சந்திரன் தன்னிடம் புண்டரீகனுடைய சாப நிகழ்ச்சியைக் கூறியது, தனக்குக் கிடைத்த கந்தர்வசாபம் புண்டரீகனுடைய சாபவிமோசனத்திற்காகத்தான், சுவேத கேதுமுனிவரை நாடப்போனது ஆக நடந்த எல்லா வற்றையும் கூறி மறைந்தான். இப்பொழுதுதான் சந்திரா பீடன், கபிஞ்சலன், வைசம்பாயனன் ஆகியோர்களின் பிறவி ரகசியங்கள் காதம்பரி மகாசுவேதை முதலியோர் களுக்குத் தெரியவந்தன. வைசம்பாயனன் என்ற உருவத் துடன் வந்த தனது காதலனைத் தெரியாமல் தானே சபித்ததை உணர்ந்த மகாசுவேதைக்கு வருத்தம் அதிகமாய்விட்டது. மறுபடியும் காதலனைக் காண்போம் என்ற ஆசையால் வழக்கம்போல் தனது விரதத்தைத் தொடர்ந்து நடத்திவருகிருள் மகாசுவேதை. காதம்பரியும் குளக்கரையிலேயே சந்திராபீடனின் உடலைக்காத்துக் காலம் கழித்து வருகிருள். தாராபீடன், சுகநாசன் முதலியோர் கள் குளக்கரையில் நடந்த சம்பவங்களைக் கேட்டு வருந்தி, இமயமலைக்கு வந்து புதல்வர்கள் உயிர் பெறப்போவதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிருர்கள்.

இடம்: விந்தியமலைக்காடு. உச்சிவேளை. ஒரு கிளி தாகத்தால் தரையில் விழுந்து புரளுகிறது. அருகிலுள்ள ஜாபாலி முனிவருடைய ஆசிரமத்திலிருந்து முனிக்குமாரன் ஹாரீதன் என்பவன் ஸ்நானம் செய்யவரும் வழியில் கிளி படும் துயரைக்கண்டு மனந்தாங்காமல் அதை

எடுத்து ஆசிரமம் வந்து அதை அன்போடு வளர்த்து வருகிறான். யோகபலத்தால் கிளியின் வரலாறு ஜாபாலி முனிவருக்குத் தெரிந்தது. உடனே புன்னகை செய்கிறார் முனிவர். அதற்குக் காரணம் யாது என்று சீடர்கள் கேட்க, கிளியின் முற்பிறவி ரகசியங்களையும், காதம்பரியின் மகா சரித்திரத்தையும் அவர்களிடம் கூறுகிறார் முனிவர்.

தன் கதையைக் கேட்ட கிளிக்கும் பூர்வஜன்ம நினைவு வந்து நல்லறிவு பிறந்தது. ஒருநாள் சுவேதகேது முனிவரிடமிருந்து ஜாபாலி ஆசிரமம் வந்து, கிளி உருவத்தோடு இருக்கும் தன் நண்பனைப் பார்த்து, புண்டரீகனின் சாப விமோசனத்திற்காகச் சுவேதகேது செய்துவரும் முயற்சிகளை எடுத்துச் சொல்லி, அதுவரையில் அதை அங்கேயே வைத்திருக்கும்படி கபிஞ்சலன் கூறிச் செல்லுகிறான். கிளிக்குத் தன் முற்பிறவியின் நினைவுவரவே காதலி மகாசுவேதையைக் காண ஆவல் உள்ளதாய் கபிஞ்சலனின் கட்டளையைக் கடந்து மெல்லிய இறக்கைகளால் அவள் இருக்கும் திக்கை நோக்கி மெள்ள மெள்ளப் பறந்து சென்றது. நடுவழியில் பறக்கச் சக்தியற்று ஓரிடத்தில் தங்க, அதை ஓர் சண்டாளன் தனது சேரிக்கு யஜமானனின் மகளான சண்டாளக்கன்னிகையிடம் கொடுக்கிறான். அவள் அதைக் கூண்டிலடைத்து சூத்ரகன் என்ற அரசனிடம் எடுத்துச் சென்று அதை ஏற்றுக்கொள்ள வேண்டுகிறாள். கிளி தனது இனியகுரலில் அரசனைப் பாடத் தொடங்கியது. தெளிவாகக் கூறிய கிளியின் சொற்களைக் கேட்டு வியப்புற்ற அரசன் அதன் வரலாற்றைக் கேட்க, கிளி ஜாபாலிமுனிவர் கூறியபடி தனது முற்பிறவியின் நிகழ்ச்சிகளை அப்படியே கூறிற்று, அரசன் சண்டாள கன்னிகையை அழைக்க அவளும் அரசனிடம் வந்து தான் புண்டரீகனைப் பெற்றெடுத்த மகாலட்சுமியின் அவதாரம் என்றும், கிளிக்குப் பூர்வஜன்ம நினைவை ஊட்டுவதற்காகத்தான் இவ் வேஷத்தில் பிறந்ததாகவும் கூறி மறைந்தாள். சூத்திரகனுக்குத் தனது முற்பிறவி நினைவுக்கு வர தனது உடலை

விட்டுக் காதம்பரியின் மடியிலிருந்த சந்திராபீடனின் உயிரற்ற உடலில் புகுந்து கொண்டான். கிளியும் சாபம் நீங்கிப் புண்டரீகனின் உடலை அடைந்தது. தன்னுடைய மடியிலிருந்து தூங்கி எழுந்ததுபோல் உயிர்பெற்று எழுந்த சந்திராபீடனைக் கண்டு ஆச்சரியமடைந்தாள் காதம்பரி. கபிஞ்சலனுடன் புண்டரீகனும் சாபம் நீங்கி மகாசுவேதை யிடம் வருகிறான். அதனைக் கண்டுகளித்தாள் மகாசுவேதை. எல்லோரும் ஆனந்தம் அடைந்தனர். பெரியோர்களின் விருப்பப்படி சந்திராபீடன் காதம்பரியை மணந்து உஜ்ஜயினியில் இனிது வாழ்ந்துவருகிறான். மகாசுவேதையும் புண்டரீகனும் ஒன்றுசேர்ந்து சந்திராபீடனிடமே இனிது வாழ்ந்து வருகிறார்கள். □□

# மாலதீ மாதவம்

## நட்பில் அரும்பிய முடிவு

**தே**வராதன், பூரிவசு, காமந்தகி ஆகிய மூவரும் ஓரிடத்தில் குருகுலவாசம் செய்து கல்வி பயின்று வந்தனர். தேவராதன், பூரிவசு இருவரும் அந்தண வகுப்பைச் சேர்ந் தவர்கள். காமந்தகி என்பவள் பௌத்த சந்நியாசினி. தமக்குப் பிறக்கப்போகும் பிள்ளைகளுக்குச் சம்பந்தம் செய்து கொள்ளவேண்டும் என்று தேவராதனும் பூரிவசுவும் ஒரு நாள் ஒப்பந்தம் செய்து கொண்டனர். காமந்தகிக்கும் இவ்விஷயம் நன்கு தெரியும். குருகுலவாசம் முடிந்து சில நாட்கள் செல்ல தேவராதன் விதர்ப்ப நாட்டு மந்திரி யாகவும் பூரிவசு சிந்து நதிக்கரையிலுள்ள பத்மபுர அரச னிடம் மந்திரியாகவும் அமர்ந்து வந்தனர். காமந்தகி என்பவள் அவலோகிதா என்ற தனது பிரிய சிஷ்யையுடன்

பத்மபுரத்திலேயே அமைதியாக வாழ்க்கை நடத்திவந்தாள். பருவமடைந்த தன் மகள் மாலதியை, அரசனுடைய கட்டளைக்கிணங்கி அரசனின் பிரிய நண்பனை நந்தனுக்கு மணம் செய்து கொடுப்பதாக ஒப்புக் கொண்டுவிட்டான் பூரிவசு. தன் மகன் மாதவனை அர்த்தசாஸ்திரம் பயின்று வர பத்மபுரம் அனுப்புகிறான் தேவராதன். மாதவன் இங்கு வந்திருக்கும் செய்தி காமந்தகிக்குத் தெரிய வந்தது. குரு குலவாசம் செய்யும்போது, தேவராதனும் பூரிவசுவும் செய்து கொண்ட ஒப்பந்தம் இவள் நினைவுக்கு வந்ததும், மாதவனுக்கும், மாலதிக்கும் மணத்தை முடித்து வைத்து நண்பர்களுடைய வாக்குறுதியை ஈடேற்றி வைக்க எண்ண முடையவளாய் பூரிவசுவிடம் வந்து நடந்ததை நினைவூட்டு கிறாள் காமந்தகி. ''அரசனிடம் அடிமைத்தனத்தில் வாழ்ந்துவரும் காரணத்தால் எனது வாக்குறுதியையும் மீற வேண்டியதாயிற்று. நீ எப்படியாவது மாலதிக்கும் மாதவனுக்கும் அன்பை வளர வைத்து அவர்களின் திருமணத்தை ரகசியமாக நடத்த ஏற்பாடு செய்'' என்று உபாயம் கூறு கிறான் பூரிவசு. அதன்படி காதலர்களைப் பலமுறை சந்திக்கச் செய்து அவர்களுக்கு மணம் முடிக்கும் வழியைச் செய்து வருகிறாள் காமந்தகி. சிஷ்யையான அவலோ கிதையும் இக்காரியம் நிறைவேறத் தன்னால் இயன்ற வரை யில் உதவி செய்து வந்தாள். இதன்பயனாக மாலதி யின் மனம் மாதவனை நாடி ஓடிற்று. ஒரு சமயம் ஏகாந்த மாக வீற்றிருந்த மாலதி தனது காதலனுடைய ஓவியத்தை வரைகிறாள். ''இவ்வோவியத்தை எனது வேலைக் காரியான மந்தாரிகையிடம் கொடுத்தால் அதை அவள் தனது காதலனும் மாதவ தூதனுமான கலஹம்சனிடம் தருவாள். அவன் தன் எஜமானனை மாதவனிடம் காண்பிப்பான். இதனால் மாதவனுக்கும் மாலதிக்கும் அன்பு வளர்வது மட்டுமின்றி, மந்தாரிகைக்கும் கலஹம் சனுக்கும் உள்ள காதல் கனிய இது ஒரு கருவியாகவும் இருக்கும்'' என்று எண்ணி அவ்வாறே செய்கிறாள் மாலதி

யின் தோழியான லவங்கிகை. காமன்பண்டிகையன்று வழக்கம்போல் காமனைக் கும்பிட மாலதி நந்தவனம் செல்கிறாள். இதை முன்னதாகவேயறிந்த அவலோகிதா, மாதவனையும் நந்தவனத்திற்கு அனுப்புகிறாள். ஓர் மகிழ மரத்தினடியில் வீற்றிருந்து மலர் மாலையைத் தயார் செய்து கொண்டிருக்கிறான் மாதவன். பூசை முடிந்து வரும் வழியில் மாதவனைக் கண்டு பூரிப்படைந்தாள் மாலதி. அவர்கள் மனம் ஒன்று கலக்க ஒருவரை ஒருவர் கருத்து நிறைந்த பார்வையோடு பார்த்துக் கொண்டனர். மாலதி வீடு திரும்பியதும், அவளுடைய மன நிலையை அறிந்த அருமைத் தோழி லவங்கிகை, மாதவனிடமிருந்து வகுளமாலையைப் பெற்று இளவரசிக்கு ஆறுதல் கூற அந்தப்புரம் விரைகிறாள். மாதவனை எங்கும் தேடிக் காணமல் அவனுடைய நண்பன் மகரந்தன் கடைசியாக இம்மரத்தடிக்கு வந்து நடந்தவற்றையெல்லாம் நண்பன்மூலம் தெளிவாக உணர்கிறான். தனது காதலி மந்தாரகை மூலமாகத் தனக்குக் கிடைத்த ஓவியத்தை மாதவனிடம் தருகிறான் கலஹம்சன். அவ்வோவியத்தின் உயர்வைக் கண்டுகளித்து அதிலேயே ஓரிடத்தில் ''உன்னை நான் மனமார நேசிக்கிறேன்'' என்று கருத்துக் கொண்ட ஒரு சுலோகத்தை எழுதி கலஹம்சனிடம் தருகிறான் மாதவன்.

## 2

### காதல் வளர்கிறது

நந்தவனத்தில் மாதவனைக் கண்டது முதல் மாலதியின் மனம் அவனிடத்திலேயே லயித்து விட்டது. ஆனால் தன்னை மாதவன் உண்மையிலேயே காதலிக்கிறானு என்ற ஐயம் அவள் மனத்தில் ஒருபுறம் இருந்து கொண்டே வந்தது. ''அப்படியே இருவருடைய மனமும் ஒன்று கலந்தாலும் தந்தையின் எண்ணத்துக்கு மாறாக என்றால் என்ன செய்ய முடியும்?'' என்று எண்ணி வருந்துகிறாள் மாலதி. மாதவனின் ஓவியம், அவன் கட்டிய வகுளமாலை, இரண்டை

யும் கையிலேந்தி இளவரசியிடம் வருகிறுள் லவங்கி. மாலே யின் அழகைக் கண்டுகளித்துவிட்டு, அவ்வோவியத்தில் ஒரு புறம் எழுதியிருந்த சுலோகத்தைப் படித்தபிறகு இதுவரை யில் ஊசலாடிக் கொண்டிருந்த மாலதியின் மனம், உண்மை யாக மாதவன் தன்னே விரும்புகிறுன் என்று உறுதி ஏற் பட்டதும் நிம்மதியடைந்தது.

''பெண்ணே, உன் அழகென்ன? குணம்தான் என்ன? உன்னைப்போய் ஒரு நற்குணமும் இல்லாத அந்த நந்தனுக்குத் தர உன் தந்தை எப்படித்தான் சம்மதித்தார்? தனது பதவியையும் நலனேயும் கருதி உன்னே இப்படி ஓர் பாழுங்கிணற்றில் தள்ளலாமா? உன் நலனேவிடச் சுயநலனே யல்லவா தந்தை பெரியதாக மதித்துவிட்டார்? முன்பு சகுந்தலே, ஊர்வசி முதலிய பெண்மணிகள் தங்களுக்குப் பிடித்த புருஷனே மணந்திருப்பதாகச் சரித்திரம் கூற வில்லேயா? நீயும் அப்படிச்செய்தால் உன்தந்தையால் என்ன செய்யமுடியும்?'' என்று பலவாறு உபதேசம் செய்து மாலதி யின் மனத்தில் ஓர் கிளர்ச்சியை ஏற்படச் செய்கிறுள் காமந்தகி. இதனுல் மாலதியின் மனத்திலொரு மாறுதல் புதியதாகக் காணப்பட்டது. சொல்லுகிறபடி சொன்னுல் யார் மனம்தான் மாருது? அதிலும் பெண்கள் விஷயத்தில் கேட்க வேண்டுமா? பெண்கள் உடலில் மட்டும் அபலே களல்ல; உள்ளத்திலும் அப்படியே!

# 3

மறுபடியும் ஒருமுறை ''காதலர்களேச் சந்திக்கச் செய்தால் காரியம் கடைசியாக கைகூடிவிடும்'' என்று கருதினுள் காமந்தகி. காமந்தகியின் முன்னெச்சரிக்கையின் படி அவலோகிதா என்பவள் மாதவனே நந்தவனத்தில் ஓரிடத்தில் மறைந்திருக்க ஏற்பாடு செய்கிறுள். நந்த னுடைய தங்கை மதயந்திகையை மாதவனுடைய நண்பன் மகரந்தனுக்கு மணம் முடித்து வைக்க எண்ணியவளாய்

மதயந்திகையிடம் சென்று மகரந்தனைப்பற்றி வெகுவாகப் புகழ்ந்து இக்காரியத்தை நிறைவேற்றுவதில் தனது மற்றொரு சிஷ்யையான புத்தரக்ஷிதா என்பவளை மற்றொரு புரம் ஏவுகிறாள் காமந்தகி. சங்கரபுரத்தில் உள்ள பரம சிவனைத் தரிசிக்க தோழி லவங்கிகையுடன் செல்லும் வழியில் நந்தவனத்தில் மலர்களின் தோற்றந்தைக்கண்டு அவை களைப் பறிக்க எண்ணுகிறாள் மாலதி. அங்கு சற்று சமீபத் தில் ஒளிந்து கொண்டிருக்கும் மாதவனின் கண்களில் இத் தோற்றம் பட்டது. இப்படி காமந்தகி செய்த பலவழி களால் இக் காதலர்களின் கருத்து ஒன்றுபட்டது. ''மணந் தால் மாதவனை மணப்பேன்; இல்லையேல் பிணம்தான்'' என்று அசைக்கமுடியாத முடிவுக்கும் மாலதியைக் கொண்டு வந்தது.

## 4

பொழுது விடிந்தால் மாலதிக்கும் நந்தனுக்கும் திருமணம் நடக்கப் போகிறது. ஏராளமான நகரமக்கள் குழுமி இருந்தனர். எங்கும் கோலாகலம். இதையுணர்ந்த மகரந்தன், மாதவனிடம் காட்டுவழியே வெகு வேகமாக ஓடிவருகிறான். அங்கு நடுவழியில் தனியாக மலர்களைக் கொய்துகொண்டிருக்கும் மதயந்திகையின் மீது பாய, ஒரு புலி ஓடிவருகிறதைப் பார்த்தான் மகரந்தன். உடனே அப் புலியின் மேல் அம்புகளை எறிய, அது மிக்க சினங்கொண்டு தனது கூரிய நகங்களால் அவனைக் குத்திக் காயப்படுத்திக் கீழே சாயச் செய்தது. திடுக்கிட்டுக் கூச்சலிடுகிறாள் மதயந்திகை. சமீபத்திலிருந்த மாதவன், மாலதி, லவங்கி, அவலோகிதா, காமந்தகி அனைவரும் விரைகிறார்கள். அங்கு மகரந்தன் தரையில் சுயநினைவையிழந்து கிடப் பதையும், நண்பனின் பரிதாப நிலையைக்கண்டு துயரம் தாளமாட்டாது மாதவன் மயக்கமுற்றுக் கிடப்பதையும் கண்டு, எல்லோரும் கூச்சலிடுகிறார்கள். காமந்தகியின் கமண்டல நீரால் மாலதியும், மதயந்திகையும் தங்கள் காதலர்களுடைய முகத்தைக் கழுவி சுயநினைவு வரச் செய்

கிறார்கள். உடனே இவ்விரு வாலிபர்களும் புத்துயிர் பெற்று எழுந்தது போல் காணப்பட்டனர். அரசதூதன் மதயந்திகையைத் தேடி எங்கும் காணமல் இங்கு ஓடிவந்து நந்தனுக்கும் மாலதிக்கும் நடக்கவிருக்கும் திருமணச் செய்தியைக் கூறி மதயந்திகையை அரசனின் உத்தரவுப்படி அழைத்துச் செல்ல வந்திருப்பதாகச் சொல்கிறான். எல்லோரும் வருத்தத்துடன் வீடு செல்கிறார்கள். மாதவன் மாத்திரம் ''க்ஷுத்திர தேவதைகளுக்கு மனித மாமிசத்தை அளித்து அவைகளை வசப்படுத்திக் கொண்டு அதன் உதவியால் மாலதியை எப்படியும் அடைந்தேதீருவேன்'' என்ற மன உறுதியோடு அருகாமையிலுள்ள சுடுகாட்டை அடைகிறான்.

# 5

## உயிராபத்தும் உதவியும்

இடம்: சுடுகாடு. அங்கு ஒரு காளி கோயில். அகோரகண்டன் என்ற அரக்கன் அதற்குப் பரம்பரை பூசாரி. ஸ்ரீபர்வதத்தில் வசித்துவரும் அரக்கியான கபாலகுண்டலை இந்தப் பூசாரியின் பிரதமசிஷ்யை. தினந்தோறும் காளிபலிக்காகப் பல மனிதர்களைத் திருடித் தனது குருவிடம் கொண்டு சமர்ப்பிப்பது வழக்கம். ஒருநாள் ராஜவீதியோடு சென்று கொண்டிருந்த மாலதியை அபகரித்து நரபலிக்காக இங்கு அழைத்துவந்தாள் கபாலகுண்டலை. மாலதியைக் காணது நகரமே அல்லோலப்படுகிறது. மாலதியைப் பலி கொடுக்க எல்லாம் சித்தமாய்விட்டது; மாலதி என்ன செய்வாள் பாவம்! கதறுகிறாள்; கண்ணீர் விடுகிறாள்; புலம்புகிறாள். எவ்வளவு கதறியும் கேட்பாரில்லை. வாளைக் கையிலேந்தி, 'உனக்குப் பிடித்தவனை நீ நினைத்துக் கொள்' என்கிறான் அரக்கனான பூசாரி. தன்னுடைய உடல், உயிர், ஆவி இவைகளுடன் ஒன்று கலந்திருந்த மாதவனையே

நினைத்து கூவிக் கதறுகின்றாள். இவளுடைய ஒலி அங்கு மாமிச விற்பனைசெய்து கொண்டிருக்கும் மாதவனின் செவியில் கேட்டது. திடுக்கிட்டு கோயிலுக்கு ஓடி வருகிறான். பூசாரியின் கையிலிருந்த வாள் மாலதியின் கழுத்தைக் கணப்பொழுதில் கவ்வப்போகிறது. ஒரேயடியாகப் பாய்ந்து பூசாரியைக் கொன்று, மாலதியை அன்போடு தழுவிக் கொள்கிறான் மாதவன்.

# 6

இடம் : காளிகோயில். ''இனி காரியம் கைமீறி விட்டது. இனியும் பொறுத்திருந்தால் முடிவு என்ன ஆகுமோ'' என்று எண்ணி மகரந்தனுடன் அங்கு அமர்ந்திருக்கிறான் மாதவன். ராஜ்ய முறைப்படி முகூர்த்தத்திற்கு முதல்நாள் காளியை வணங்க தோழிகளுடன் இங்கு வருகிறாள் மாலதி. ''என்னை அன்புடன் நேசித்த மாதவனை மணக்காது மற்றவனைத் தீண்டவும் என்மனம் இடம் தரவில்லை. தெய்வமே! என் உள்ளத்தை உள்ளபடி உணர்ந்தும் நீ இப்படி உபேக்ஷிக்கலாமா! இனி என்னுயிரை மாய்த்துக் கொள்ளுவதைத் தவிர வேறு மார்க்கம் இல்லை'' என்று கூறிக் கஷ்டப்படுகிறாள் மாலதி. திடீரென ஒரு உபாயம் தோன்றியது காமந்தகிக்கு. மகரந்தனுக்குப் போலி மாலதி வேஷம் போட்டு அதே ஆபரணங்களால் அவனை அலங்கரித்து மணப்பந்தலுக்கு அனுப்பி, இங்கு நிஜ மாலதிக்கும், மாதவனுக்கும் அதே நல்ல முகூர்த்தத்தில் மணத்தை முடித்து விடலாம்'' என்று நினைத்து அவ்வாறே செய்கிறாள் காமந்தகி. மாலதியும் மாதவனும் மாலையை மாற்றிக் கொள்ளுகின்றனர்.

# 7

## போலி மாலதியின் லீலே

நந்தன் சூழ்ச்சியை உணராமல் போலி மாலதியுடன் சரஸம் செய்ய ஏகாந்த இடத்திற்குச் செல்கிறான். நந்தனை அவள் வேணும் என்று அவமானப் படுத்திவிடுகிறாள். சினங் கொண்ட நந்தன் அவளை மணக்காமல் திரும்பிவிடுகிறான். போலி மாலதியினால் நந்தனுக்கு ஏற்பட்ட அவமானத்தை உணர்ந்த மதயந்திகை கோபங்கொண்டு நிஜ மாலதியிடம் வருகிறாள். அங்கு மாலதியும் லவங்கிகையும் அமர்ந்திருக் கிறார்கள். லவங்கிகை மாலதி பக்கம் பேசுவதும், மதயந்திகை தனது அண்ணனை நந்தனுக்குப் பரிந்து பேசு வதுமாக ஓர் குட்டி நாடகம் வாய்ச்சண்டையாக உரு வாகியது. போலி மாலதி நாடகத்தை மதயந்திகை தெரிந்து கொள்ளவில்லை. இப்படி சண்டை செய்து கொண்டு மதயந்திகைக்கு மகரந்தனிடம் உள்ள ஆசையை அதிகமாக்கி அதன் மூலம் அவர்களுடைய மணத்தை முடிக்க திட்டமிட்டு மகரந்தனைக் குறித்து ஏதோ பேசத் தொடங்கு கிறாள் லவங்கிகை. அதனால் மதயந்திகையின் மனமும் மாறுகிறது. போலி மாலதி வேஷத்தைக் கலைத்துவிட்டு இவ்விடம் வருகிறான் மகரந்தன். இவர்களுடைய காதலும் வளர்கிறது.

# 8

## போரும், பிரிவும்

மாலதியும், மாதவனும் காந்தர்வ முறைப்படி மணம் புரிந்து ரகசியமாய் இன்புற்று வருகிறார்கள். மகரந் தனுக்கும் மதயந்திகைக்கும் நடந்த சந்திப்பைப் பற்றி கலஹம்சன் மாதவனிடம் வந்து கூறுகிறான். மனம் மலர்ந்தது மாதவனுக்கு. இதற்குள் காமந்தகி நடத்திய

போலி மாலதி நாடகம் அரசனுக்குப் புலனாகி விட்டது; சீறுகிறான். மகரந்தனைக் கொல்ல படைகளை அனுப்புகிறான். சண்டை. இருவருக்கும் வலுக்கிறது. இதையுணர்ந்த மாதவன் நண்பனைக் காக்க ஓடிவருகிறான். மாதவனின் செய்தி அறிந்துவர அவலோகிதா, லவங்கிகா, காமந்தகி முதலியவர்களை நகரத்திற்கு அனுப்புகிறாள் மாலதி. மதயந்திகை மாலதிக்குச் சற்று சமீபத்தில் ஏதோ செய்து கொண்டிருக்கிறாள். மாலதி மாத்திரம் அக் காட்டில் தனியாக இருக்கிறாள். தனது குருவைக் கொன்றது முதல் வஞ்சம் தீர்க்கச் சமயம் பார்த்திருந்த கபாலகுண்டலை திடீரென மாலதியின் முன் தோன்றி தனியாக இருக்கும் மாலதியை ஸ்ரீபர்வதத்திற்கு எடுத்துச் செல்கிறாள். எல்லோரும் மாலதியைக் காணாது தேடி அலைந்து வாடுகிறார்கள். அச் சமயம் மாதவனும் மகரந் தனும் அரச சேனையை வென்று வெற்றிக்கோலத்துடன் மாலதியின் இருப்பிடம் வருகிறார்கள். அவள் களவுபோன செய்தி தெரியவருகிறது. புலம்பினான் மாதவன்; புரண்டான் தரையில். எல்லோரும் துயரத்தில் ஆழ்ந்து விட்டனர்.

## 9

### பிரிந்தவர் கூடினர்

சௌதாமினி என்பவள் காமந்தகி என்பவளின் பிரதமசிஷ்யை. இவள் வெகுநாளாக ஸ்ரீபர்வதத்தில் தவம் புரிந்து வருகிறாள். இவள் அருகில் மாலதியைக் கொல்ல முயற்சி செய்கிறாள் கபாலகுண்டலை. பெண் என இரக்கம் கொண்ட சௌதாமினி அச்செயலிலிருந்து கபால குண்டலையைத் தடுக்கிறாள். பயத்தால் அரக்கி மாலதியை உயிருடன் விட்டுவிட்டு ஓடி விடுகிறாள். யோக பலத்தால் மாலதியின் சரித்திரத்தை உணர்ந்த சௌதாமினி மாலதியின் கழுத்திலிருந்த வகுளமாலையை எடுத்துக்கொண்டு மாதவனை தேற்றுவதற்கு அவனிடம் ஓடி வருகிறாள்.

பிரகத்துரோணி என்பது ஒரு மலை. அதன் அருகில் பாடலாவதி என்ற ஒரு நதி ஓடுகிறது. மாலதியின் பிரிவினால் வருந்தி மகரந்தனுடன் இம்மலையில் வசித்துவருகிறான் மாதவன். 'மாலதி, மாலதி' என்று கூவிக் கொண்டு பைத்தியம் போல் இங்கும் அங்கும் அலைகிறான். தோழனின் வருத்தத்தைக் கண்டு மனம் தாளாது மகரந்தன் நதியில் வீழ்ந்து உயிரை மாய்த்துக் கொள்ள முயலுகிறான். அச்சமயம் சௌதாமினி அங்கு தோன்றி, மாலதி உயிருடன் இருக்கும் செய்தியைக்கூறி, அவனையும் அழைத்துக் கொண்டு மாதவனிடம் சென்று வகுளமாலையைக் கொடுத்து, மாலதி தன்னுடன் உயிருடன் இருக்கும் செய்தியை மாதவனிடம் கூறுகிறாள். அவள் விருப்பப்படி யோக சக்தியால் ஓர் நொடியில் மாதவனை ஸ்ரீபர்வதந்திற்கே அழைத்துச் செல்கிறாள் சௌதாமினி.

# 10

இடம்: மகிழமரம். காமந்தகி, லவங்கி, அவலோகிதா, மதயந்திகை ஆகியவர்கள் மாலதியின் பிரிவினால் துயரமுற்று இருக்கின்றனர். "மாலதிக்கும் மாதவனுக்கும் மணம் முடித்துவைக்க நான் இதுவரை செய்த முயற்சிகளெல்லாம் ஒரு நொடியில் மடிந்துவிட்டனவே! நாம் ஒன்று நினைக்க தெய்வம் ஒன்று நினைக்கிறதே" என்று ஒருபுறம் புலம்புகிறாள் காமந்தகி. "அன்புடன் நான் நேசித்துவந்த மகரந்தனை எங்கு, எப்பொழுது, எப்படிக் காண்பேன்? எங்கு சென்றாரோ? யான் அறியேன்" என்று மற்றொரு புறம் கதறிக் கண்ணீர் விடுகிறாள் மதயந்திகை. "ஒரு கணமும் என்னைவிட்டு அகலாத என் உயிர்த்தோழி மாலதி எங்கு சென்றாளோ?" என ஓலமிடுகிறாள் இன்னொரு இடத்தில் லவங்கி. பிரிவாற்றாமையினால் இவர்கள் அனைவரும் நதியில் வீழ்ந்து மடிவதே இதற்குப் பரிகாரமென முடிவுசெய்து கொண்டனர். அத்தருணம் மகரந்தன் அங்கு தோன்றி சௌதாமினி செய்த உதவியைக் கூறி

அவர்களைத் தற்கொலை முயற்சியினின்று விடுவித்தான். காமந்தகி முதலானோர் உள்ளம் இச் செய்தியைக் கேட்டுச் சற்று ஆறுதலடைந்தது. செளதாமினி என்ற பெயரைச் சொன்னதும், அவள் தனது பிரதமசிஷ்யை செளதாமினியாகத்தான் இருக்கவேண்டும் என்று காமந்தகிக்குத் தோன்றிற்று. இதற்குள்ளாக மாலதி மாதவன் இருவரையும்அழைத்துக்கொண்டு, தனது குருவாகிய காமந்தகியிடம் வருகிறாள் செளதாமினி. வரும் வழியில் தனது மகளைப் பறிகொடுத்த பூரிவசு, அக்கினிப்பிரவேசம் செய்யப்போகும் செய்தியை யோக மகிமையால் அறிந்து, அங்கிருந்தாவறே மாலதியையும் மாதவனையும் காமந்தகியிடம் அனுப்பிவிட்டுத் தான் மாத்திரம் பூரிவசுவிடம் செல்கிறாள் செளதாமினி. திடீரென இருவரும் (மாலதியும், மாதவனும்) வானவழியாக அவர்கள் முன் தோன்றுகிறார்கள். சந்தோஷத்தால் எல்லோரும் இவர்களைக் கட்டித்தழுவிக் களிப்பெய்தினர். இதுவரை நடந்ததைக் காமந்தகி முதலியோரிடம் கூறுகிறான் மாதவன். செளதாமினியின் முயற்சியால் தற்கொலை முயற்சியிலிருந்து தப்பிய அரசன், தனது தவற்றை உணர்ந்து தனது புதல்வி மாலதியை மாதவனுக்கும் நந்தனுடைய தங்கை மதயந்திகையை அண்ணனின் ஆணைப்படி மகரந்தனுக்கும் கொடுத்துத் திருமணம் செய்விக்கச் சித்தமாக இருப்பதாக ஓர் ஓலையில் எழுதி அதை மாதவனிடம் சேர்பிக்குமாறு செளதாமினியைக் கேட்டுக் கொண்டான். அப்படியே செளதாமினியின் மூலம், அவ்வோலை காமந்தகியிடம் வர அச் செய்தி மாதவன் முதலியோருக்குத் தெரியவே, எல்லோரும் ஆனந்தமடைந்தனர். மாலதிக்கும் மாதவனுக்கும், மகரந்தனுக்கும் மதயந்திகைக்கும் முறைப்படித் திருமணம் நடந்தேறியது. செளதாமினி காமந்தகி ஆகியவர்கள் தங்கள் கடமையை முடித்துக் கொண்டு இருப்பிடம் சென்றனர். பூரிவசு தேவராதன் இவர்கள் பாலியத்தில் செய்து கொண்ட ஒப்பந்தம் ஒழுங்காய் நடந்தேறியது. □□

# ரத்னேச பிரசாதம்

இடம் : சுவர்ணபுரம். வசுபூதி என்பவன் கந்தர்வ குலத் தலைவன். வசுமதி என்பாள் அவனுடைய மனைவி. குபேரனுடைய ஆருயிர்த் தோழனாக இருந்துகொண்டு, சங்கீதம் நடனம் முதலிய கேளிக்கைகளால் அவனைச் சந்தோஷப்படுத்தி வருவதே வசுபூதியின் வழக்கமாய் இருந்து வந்தது. நாளடைவில் இவனுக்கு ரத்னாவளி என்றொரு பெண்குழந்தை பிறந்தது. அழகுக்கெல்லாம் இருப்பிடமாய் உள்ள கந்தர்வ குலத்தில் பிறந்த ரத்னாவளியின் அழகைப்பற்றிச் சொல்லவா வேண்டும்? இவளுக்கு பருவ காலம் வந்தது. தந்தையின் உத்தரவு பெற்று சங்கீதம் பயின்றுவர சரசுவதிதேவியிடம் செல்கிறாள் ரத்னாவளி. பார்வதிதேவி, ரத்னாவளி ஆகியவர்கள் ஒருங்கே சரசுவதியிடம் சங்கீதம் பயின்று வருகிறார்கள். அப்பொழுது பார்வதி தேவியுடன் நாளடைவில் நட்பு அதிகரித்து ரத்னா

வளியைத் தனது சொந்தப் பெண்போல் பாவித்து அன்பு செலுத்தி வருகிருள் பார்வதி. சங்கீத கலைப் பயிற்சி முற்றுப்பெறவே குருகுலவாசம் முடிவடைந்தது. ரத்னுவளியை விட்டுப் பிரிய மனம் வரவில்லை பார்வதி தேவிக்கு. ''பரமசிவன் அருளால் நீ நல்ல கணவனை அடையக்கடவாய்'' என ரத்னுவளியை ஆசீர்வதித்துக் கலாவதி என்ற தோழியைத் தனது நட்புக்கு அறிகுறியாக அவளுக்குப் பரிசாக அளித்து சுவர்ணபுரமே அனுப்புகிருள் பார்வதிதேவி.

**கா**சி என்ருெரு புண்ணிய க்ஷேத்திரத்தினருகில் புனிதமான கங்கை கம்பீரமாக ஓடுகிறது. அதன் கரையில் மனத்தைப் பறிக்கும் பல நந்தவனங்கள். அங்கு ஒரு அழகியசிவன்கோயில். அதில் ரத்னேசுவரர் லிங்க வடிவமாய் நின்று தன்னைப் பணிய வருபவர்களின் பிணியைப் போக்கி வருகிருர். ரத்னேசுவரர் ''வரப்பிரஸாதி'' என்ற புகழ் புவிமுழுவதும் பரவியது. தனக்குத் தகுந்த பதி கிடைக்க வேண்டும் என்று வெகு நாட்களாக எதிர்பார்த்திருந்த ரத்னுவளி, ரத்னேசுவரப் பெருமானின் பெருமையைக் கேட்டு, சித்ரலேகா, அனங்கலேகா என்ற தோழிமாருடன் தினந்தோறும் காசிமாநகரம் வந்து பரமசிவனைப் பலவாறு பாடிப் பணிந்து சுவர்ணபுரம் செல்லுவது வழக்கம். இப்படியே வெகுநாட்கள் சென்றன. ஒருநாள் வழக்கப்படித் தோழிமாருடன் பரமசிவனை மெய்ம்மறந்து மலர்களால் பூஜித்துக் கொண்டிருக்கிருள். இவளுடைய பக்திக்கு மெச்சின பரமசிவன் இவள் முன் தோன்றி, ''பெண்ணே! உனது பூஜையைப் பெற்று நான் புளகாங்கிதனுனேன்! கூடிய சீக்கிரம் உனது பெயர்கொண்ட ஓர் உத்தம புருஷனைக் கணவனுக அடையப்போகிருய். இன்று உன் கனவில் அவ்வாலிபன் உன் முன்பு தோன்றுவான்'' எனக் கூறி மறைகிருர். ஆனந்தம் தாளவில்லை ரத்னுவளிக்கு.

நடந்தவற்றைச் சொல்லிக்கொண்டே தோழிமாருடன் அருகிலுள்ள நந்தவனம் வருகிறுள் ரத்ஞவளி.

பாதாள லோகத்துக்குப் போகவதி என்பது தலை நகரம். சர்ப்பக்கூட்டத்திற்குத் தலைவஞன சந்திரசூடன் இதை ஆண்டு வருகிறுன். இவனுடைய மகன் பெயர் ரத்னசூடன். இவன் அழகிலும் வீரத்திலும் நிகரற்றவன். தினந்தோறும் இத் தேவலாயம் வந்து ரத்னேசுவரரைப் பணிந்து தன் இருப்பிடமே சென்று வந்தான் ரத்னசூடன். ஒருநாள் தன் நண்பன் விதூஷகனுடன் கோயிலுக்கு வருகிறுன் ரத்னசூடன். என்றும் கண்டறியாததோர் நறுமணம் இவனுடைய மூக்கைத் துளைக்கிறது. காரணம் விளங்க வில்லை. எங்கும் திரும்பிப் பார்க்கிறுன். கீழே பெண்மணிகளின் காலடிகள் பதிந்து கிடந்தன. இதற்குக் காரணம் யாதென ஆலோசனை செய்து கொண்டிருக்கும்போது, ஒரு பெண்மணியின் இனிய குரல் இவனுடைய ஆலோசனையைக் கலைத்தது. பரமசிவனைப் பணிவதற்காக ஒரு பெண்மணி வந்திருக்கிறுள் என்று பொதுவாக ஓர் யூகம் தோன்றியது. அக் காலடிகளைத் தொடர்ந்து விதூஷகனுடன் நந்த வனம் வருகிறுன் ரத்னசூடன். ஒரு மரத்தடியில் ரத்ஞவளி வீற்றிருப்பதும் தோழிமார்கள் அவளைச் சுற்றி உட்கார்ந்திருப்பதுமான ஓர் காட்சி இவன் கண்களில் பட்டது. என்றுமில்லாததோர் முகமலர்ச்சிக்குக் காரணம் யாதென தோழிமார்கள் கேட்க, பரமசிவன் தோன்றி தனக்கு உரைத்த தகவலை அவர்களிடம் கூறுகிறுள் ரத்ஞவளி. ''உனது தந்தை கந்தவர்வகுலத் தலைவன். நீ சங்கீதம் பயின்றது சரஸ்வதிதேவியிடம். உலக மாதாவான பார்வதிதேவியே உனது ஆருயிர்த்தோழி. இப்படிப்பட்ட உனக்குச் சிறந்ததோர் வரம் கிடைப்பதில் என்ன ஆச்சரியம்?'' எனத் தோழிகளின் பரிகாசப் பேச்சுக்கள் அங்கு செடிமறைவில் இருந்த ரத்னசூடனின் செவியில் வீழ்ந்தன. இதனுல் ரத்ஞவளி வசுபூதியின் மகள் என்றும், அவள்

தன்னை மணக்க விரும்புகிருள் எனவும் தெரியவந்தது ரத்னசூடனுக்கு. கதிரவன் தன் கிரணங்களைச் சுருக்கிக் கொண்டு மறைந்துவிடுகிருன். வந்தவர்களும் அவரவர் வீடு திரும்புகிருர்கள்.

# 2

இடம் : சுவர்ணபுரம். காலை வேளை. ரத்னுவளியின் அந்தப்புரம். கனவில் ரத்னசூடனைக் கண்டது முதல் தனது மனத்தை அவனிடமே பறிகொடுத்து விட்டாள். அவனை நினைத்து உருகிவருகிருள். விரக வேதனையில் இவளுக்கு உலகமே வெறுத்துவிட்டது. சந்திரனைப் பழிக்கிருள். சமீபத்தில் இருந்த தோழிகளைத் தோன்றியபடித் திட்டுகிருள். ''ரத்னசூடன் இங்கு வந்து விட்டான்'' என்று பித்துப்பிடித்து ஏதேதோ சொல்லி உளறுகிருள். இவ்வாறு காதல் வெள்ளம் வெட்கக் கரையைக் கடந்து விட்டது. தோழிகளைப் பார்த்து எல்லா அரசகுமாரர்களையும் சித்திரம் வரைந்துவரச் சொல்லுகிருள். அப்படியே எழுதி வருகிருர்கள் தோழிமார்கள். அச்சித்திரத்தில் ''இவன் என் காதலன் அன்று, இவன் என் காதலன் அன்று'' என்று சொல்லி எல்லோரையும் தள்ளிக்கொண்டே வருகிருள். முறையே ரத்னசூடனுடைய சித்திரத்தைக்கண்டு ''இவன்தான் என் காதலன்'' என்று பூரித்துப் போகிருள் ரத்னுவளி. இப்படியெல்லாம் கஷ்டப்படுவதைக் காண்கிருள் தோழி கலாவதி. ''இவளுடைய மனேநிலையை ரத்னசூடன் உண்மையில் அறிந்தால் இவளை அடைய அவன் முயற்சி செய்வான்'' எனக் கருதினுள் கலாவதி. மாந்திரீகர்களை வரவழைத்து போகவதி நகரம் சென்று ரத்னசூடனுக்கு இங்கு ரத்னு

வளியின் நிலையைக் கண்முன் நடப்பது போல் காட்டி வரும் படிச் செய்கிறாள் கலாவதி. காதலர்கள் இருவரும் ஒரு வரை ஒருவர் உண்மையாக நேசித்தால் மாத்திரம் காரியம் கைகூடிவிடாது. ஒருவருடைய நிலையை மற்றவருக்கு எடுத்துச் சொல்லி அவர்களைச் சேர்த்துவைக்க எப் பொழுதுமே நம்பிக்கையானதொரு நண்பனுடைய உதவி மிகமிகத் தேவையாகும். அந் நிலையில் இருந்து காரியத்தைச் செய்து வருகிறாள் கலாவதி.

ரத்னவளியைத் தோட்டத்தில் கண்டது முதல் ரத்னசூடனுக்கும் இதே நிலைதான் இருந்து வருகிறது. எங்கு பார்த்தாலும் ரத்னவளியின் தோற்றம். இரவில் தூங்குவது இல்லை. ராஜ்யமும் பிடிக்கவில்லை. உணவு உள்ளே செல்லவில்லை. விரகவேதனையில் வெளுத்து இளைத்து இருந்த அவனுடைய உடலில் உயிர் மாத்திரம் எங்கோ ஓர் மூலையில் ஊசலாடிக் கொண்டிருந்தது. கவலை யோடு விதூஷகனுடன் மேல்மாடியில் உறக்கமற்று உட் கார்ந்து கொண்டிருக்கிறான் ரத்னசூடன். "இந்திரஜால வித்தை! மாயவித்தை! காணத் தவறாதீர்கள்! எங்கோ நடப்பதைக் கண்ணெதிரே பார்க்கலாம்! பரவசமடை யலாம்!" என்று சொல்லிக் கொண்டே தெருவழியே செல்லு கிறார்கள் கலாவதி அனுப்பிய மந்திரவாதிகள். இதைக் கேட்டான் ரத்னசூடன். "இவர்களுடைய உதவியால் ரத்னவளியின் நிலையை நாம் தெரிந்து கொண்டால் பிறகு அதற்குத் தக்கபடி நாம் இங்கு நடந்து கொள்ளலாம்" எனக்கருதி அவர்களை அழைத்துவர ஏவுகிறான் ரத்னசூடன். என்ன ஆச்சரியம்! ரத்னவளி தன்னைக் குறித்து கவலை யுற்றிருப்பது, தோழிகளைக் கொண்டு அரசகுமாரர்களின் சித்திரங்களை வரையச் சொல்வது, அதனுள் ரத்னசூடனைக் கண்டுகளிப்பது ஆகிய நடந்த சம்பவங்களை எல்லாம் தன் முன் நடப்பதுபோல் கண்டுகளிக்கிறான் ரத்னசூடன். பெரும் வியப்பு உண்டாயிற்று. அவர்களுக்குத் தக்க சன்

மானம் அளித்து அனுப்பிவிடுகிறான். மந்திர பலத்தால் ரத்னாவளியின் மனோநிலையை அறிந்த பிறகு அவன் மனம் மட்டில்லா மகிழ்ச்சி அடைந்தது. ''நாம் அவளைக் காதலிப்பது தகுந்ததே. இருவருடைய மனமும் ஒன்றுபட்டிருப்பதால், எண்ணம் ஈடேற வழி இருக்கிறது'' என எண்ணங் கொண்டு தனது விருப்பத்தை நிறைவேற்றுவதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்து வந்தான்.

## 3

இடம் : நந்தவனம். இயற்கை அழகு கண்ணைப் பறிக்கிறது. அங்கு கொடிகளால் செய்யப்பட்ட ஊஞ்சலில் உட்கார்ந்து காதலனை நினைத்து வருகிறாள் ரத்னாவளி. விரகவேதனைப்படும் அவளுக்கு ஆறுதல் அடைய ஒரு உபாயம் உதயமாயிற்று. வர்ணங்களைக் கொண்டுவரச் செய்து காதலனின் சித்திரத்தை வரையச் செய்து, அதனைக் கண்டுகளித்து வருகிறாள். இதுவும் அவள் துயரத்தைப் போக்குவதில் அவ்வளவு பயன் அளிக்கவில்லை. நேரில் காதலனை அழைத்துக் கண்டாலொழிய மனம் நிம்மதியடையாது என முடிவுக்கு வந்து அவனை அழைத்துவர கலாவதியைப் போகவதிக்கு அனுப்புகிறாள் ரத்னாவளி. ஏட்டுச் சுரக்காய் பசியைத் தீர்க்குமா? சித்திரத்தில் கண்ட காதலனின் உருவம் காதல்பசியைத் தீர்க்க எவ்வாறு உதவும்! காதலனுடைய வரவை எதிர்பார்த்தவண்ணம் மரத்தடியில் ஏங்கி உட்கார்ந்திருக்கிறாள் காதலி. கலாவதி ரத்னசூடனை அடைகிறாள். இதுவரையில் பார்த்திராத இவளை யாரென வினவுகிறான் ரத்னசூடன். வந்த காரணத்தைக் கூறுகிறாள் தோழி. மந்திரவாதிகளின் மூலம் ரத்னாவளியின் நிலையைக்கண்ட செய்தியை மனம் விட்டு இவளிடம் கூறுகிறான் ரத்னசூடன். மறுபடியும் மந்திரவாதிகளின் மாயா பலத்தால் விதூஷகனையும்

ரத்னசூடனையும் ஒரு நொடியில் ரத்னவளி இருக்கும் நந்த வனத்திற்கு அனுப்பிவிடுகிறாள் மாயகலாவல்லியான கலாவதி. மரத்தடியில் காதலியின் முன்னிலையில் மாயமாய் வந்து இறங்குகிறான் ரத்னசூடன். அங்கு பெண் மணியின் காலடிகள் கீழே பதிந்திருந்தன. அவற்றைக் கண்டு புலம்புகிறான். மரத்தடியில் வைத்திருக்கும் தனது ஓவியத்தை எடுத்து அதில் ரத்னவளியின் ஓவியத்தை மற்றொருபுறம் எழுதி இருவரையும் சித்திரத்தில் ஒன்று சேர்த்து அழகு பார்த்து பூரிக்கிறான். கானகமெல்லாம் திரிகிறான். கடைசியாகக் காதலியின் தரிசனம் கிட்டுகிறது. நேரில் அவளைக்காண வெட்கமுற்று ஓர் மரத்தடியில் அவள் அருகில் ஒளிந்து கொள்ளுகிறான் ரத்னசூடன். தூது சென்ற கலாவதி இன்னும் வராதது ரத்னவளிக்கு மிகுந்த வருத்தத்தை அளித்தது. மறுவிநாடியில் தோழி கலாவதி வந்து, தான் காதலனை இங்கு வரவழைக்கச் செய்த விருத் தாந்தத்தை விரிவாகச் சொல்லுகிறாள்.

கதிரவன் மறைகிறான். சந்திரன் ஒளியோடு கீழ்த் திசையில் தோன்றுகிறான். சித்திரை நட்சத்திரம் அவனைத் தொடர்கிறது. இந் நட்சத்திரத்தை சந்திரனின் மனைவி யென சாஸ்திரம் கூறுகிறது. இந் நட்சத்திரத்துடன் கூடிய சந்திரனை வழிபட்டு நல்ல கணவனைப் பெண்மணிகள் அடைந்தார்கள் என்று பண்டைக்காலப் பழக்கம். அதன் படி மகாராணியாரின் உத்தரவுப்படி ரத்னசூடனைக் கணவனாக அடைய விரும்பி சந்திரபூஜை நடத்த குளக் கரைக்கு வருகிறாள் ரத்னவளி. நடுவழியில் தான் எழுதி வைத்த சித்திரம் கிடைத்தது. பார்த்து திடுக்கிட்டாள். அதில் தன்னுடைய சித்திரமும் மற்றொருபுறம் எழுதிவைக்கப்பட்டிருந்தது. அது இவளை ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டது. இது ரத்னசூடனின் கைத்திறனாகத்தான் இருக்கவேண்டும் எனக் கருதினாள். சந்திரபூஜை ஆரம்ப மாகிறது. தனது விருப்பத்தை வெளியில் வாயாரச்

சொல்லி சந்திரனை வேண்டிக் கொண்டு பூஜை செய்கிறாள். செடிமறைவில் மறைந்து, சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்த ரத்னசூடன் செவியில் அச்சொற்கள் அமுதம்போல் விழுந்தன. அவள் முன் தோன்றுகிறான். ஒருவரையொருவர் கண்டு கருத்தைப் பரிமாறிக் கொண்டு காலங் கழித்தனர். மகள் ரத்னவளி, பூஜை முடித்து இன்னும் வரவில்லையே என்று எண்ணிக் குளக்கரைக்கு வருகிறாள் மகாராணி. காதலர்கள் பிரிகின்றனர். இரவு வேளையில் ஊர் செல்ல முடியாமல் விதூஷகனுடன் ஓர் மரத்தடியில் உறங்குகிறான் ரத்னசூடன். வீடு சென்ற ரத்னவளிக்கு மனம் நிம்மதியடையவில்லை. தோட்டக் காவற்காரன் வேடம்பூண்டு இங்கு வருகிறாள் ரத்னவளி. விதூஷகன் குறட்டைவிட்டுத் தூங்குகிறான். ''யார் இங்கு தூங்குகிறது'' என உரத்த குரலில் மிரட்டுகிறாள் மாறுவேடம் பூண்ட ரத்னவளி. விதூஷகன் அலறி விழித்துக் கொள்ளுகிறான். மாறு வேடத்துடன் வந்திருப்பவள் தனது காதலி எனத் தெரிந்து அவளுடன் இரவைக் கழிக்கிறான் ரத்னசூடன். சூரிய உதயமாகிறது. வந்தவர்கள் தங்கள் தங்கள் வீடு திரும்புகின்றனர்.

## 4

நாரதருக்குக் கலகம் என்றால் ரொம்பவும் பிடிக்கும். ஆனால் அவருடைய கலகம் முடிவில் நன்மையாகவே முடியும். அவர் ஓர் அரக்கனை அழிக்க விரும்பினால் அப்பொழுது இம் முறையைக் கையாளுவது வழக்கம். சுபாகு என்பவன் பாணாசுரனுடைய மருமகன். இவன் தொல்லை ஜனங்களால் பொறுக்க முடியவில்லை. அழிவுகாலம் வந்தபொழுது அரக்கர்கள் அளவில்லாத துன்பத்தை அளித்து வருவார்கள். இவனை ஒழிக்க எண்ணங் கொண்டார் நாரதர். ''வசுபூதியின் புதல்வி ரத்னவளியின் அழகைப் பற்றி சுபாகுவினிடம் சொல்லி, அவனுடைய மனத்தை

தூண்டச் செய்து, அதன்மூலம் ரத்னசூடனுக்கும் இவனுக்கும் சண்டையைக் கிளப்பி இவனை ஒழித்துக் கட்ட வேண்டும்'' என்று எண்ணி நாரதபகவான் அரக்கனிடம் வந்து ரத்னாவளியை மணக்கும்படித் தூண்டிவிட்டுச் செல்கிறார். அவள் ரத்னசூடனைக் காதலிக்கிற செய்தி இவனுக்குத் தெரியும். தான் வசுபூதியின் வேடம் பூண்டு தனது தூதனுக்கு வசுபூதியின் மந்திரி சித்திராங்கதன் வேடம் போடவைத்து, பத்ரிகாசிரமம் வருகிறான் அரக்கன். வழக்கம்போல் ரத்னாவளி பரமசிவனைப் பணிய அங்கு வருகிறாள். இதைக்கண்ட மாயா வசுபூதி ஓர் மாயத்தூதனை ரத்னாவளியிடம் அனுப்பி, ''தனது நண்பனான குபேரனுடைய புஷ்பகவிமானம் ஏறி ஆசிரம அழகைக் காண மந்திரி சித்திராங்கதனுடன் உனது தந்தை வசுபூதி பத்ரிகாசிரமம் வந்து தங்களை அங்கு அழைத்து வரச் சொல்லியிருக்கிறார்'' என்று சொல்லிவரச் செய்கிறான். ராட்சஸ மாயையை உணராத ரத்னாவளி, பத்ரிகாசிரமம் வந்து மாய வசுபூதியையும், மாயச் சித்திராங்கதனையும் உண்மையானவர்கள் என்று எண்ணி வழக்கம் போல் பேசத் தொடங்குகிறாள். பாவம் பேதை! இவளுக்கு ராட்சஸ மாயை எங்கு தெரியப் போகிறது! இவளுடைய மணப் பேச்சை பிரஸ்தாபம் செய்கிறான் மாய வசுபூதி. தான் ரத்னசூடனை மணக்க உறுதி கொண்டுள்ளதாக உள்ளத்தில் உள்ளபடி கூறுகிறாள் ரத்னாவளி. இதை ஏற்க மறுத்து சுயம்வரம் ஏற்பாடு செய்யவேண்டுமென வாதாடுகிறான் மாய வசுபூதி. இச்சமயம் சுபாகுவின் தூதன் போல் ஒருவன் அவன் திட்டப்படி மாய வசுபூதியிடம் வந்து, ''நான் பாணனுடைய தூதன்; தங்கள் மகள் ரத்னாவளியைத் தனது மருமகனான சுபாகுவுக்கு மணம் செய்து தரும்படி பாணன் தங்களைக் கேட்கிறான்'' என்று ஒரு கட்டுக்கதையை சொல்லுகிறான். மாய வசுபூதியும் ரத்னாவளியின் மனதை மாற்றப் பலவாறு முயன்றும் பலன் அளிக்கவில்லை. அவள் தன் விருப்பத்தை மாற்றிக் கொள்ள மறுக்கிறாள். ரத்னசூடன் கலகக்கார நாரதர் மூலம் சுபாகுவின் கபட நாடகத்தை

உணர்ந்து ஆவேசமாக பத்ரிகாசிரமம் வருகிறான். உடனே மாய வசுபூதியும் மாய சித்திராங்கதனும் பயந்து மாயமாக ஓடப் பார்க்கிறார்கள். அசுரனைப் பிடித்து, சண்டை செய்து அவனை மாய்க்கிறான் ரத்னசூடன். இப்பொழுது தான் ரத்னாவளிக்கு இதுவரை தான் பேசியது மாய வசுபூதியிடம் எனப் புலனாகிறது. ரத்னாவளியின் தந்தை ரத்னசூடனின் பராக்கிரமத்தை மெச்சி, தனது மகளை மனமாரக் கொடுத்து மணம் செய்விக்கிறான். தம்பதிகள் மணக் கோலத்துடன் ரத்னேஸ்வர தேவலாயம் வந்து பரம சிவனைப் பணிந்து பிரார்த்தனை செலுத்துகின்றனர். நாரதரும் அங்குவந்து இவர்களுடைய மணத்தை முடித்து வைக்கத் தான் கையாண்ட திட்டத்தைக் கூறுகிறார். □□

